




இயற்கையான வாஞ்சையுடன்

அடைய விரும்புதல்

குழந்தைக்கு ஆரோககியத்தைத்

தரும்

வுட்வார்ட் வைத்தியனின

"கிரைப் வாட்டர்"

என்னும் மருந்துத் திராவகம

# WOODWARD'S
# GRIPE WATER

W. WOODWARD LTD.. LONDON. ENGLAND

கரைப வாட்டர் இப்பொழுது மருந்து சாமான்கள் கட்டுப்பாடு அறிககையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பவரின் விலை: பாட்டில் விலை ரூ. 2-2-0



## கடும் தேமலாக படருமா?

உங்கள் சரும நோய்களை ஜாம்-பெக் குணப்படுத்தும்.

—:—

சிறு தழும்புகள், பிற்பாடு கடும் தேமலாக படருவதற்கான அடையாளம். எனவே எரிச்சல், புண் முதலியவற்றை அலக்ஷியம் செய்யாதீர்கள். பிரதி இரவும் ஜாம்-பெக் தடவுங்கள். ஜாம்-பெக் கிலுள்ள சுத்திகரிக்கப்பட்ட மூலிகை ஆயில்கள் சருமத்திற்குள் சென்று, வலியை சமனமூட்டி, வீக்கத்தைக் குறைத்துவிடும். ஜாம்-பெக் விஷக்கிருமிகளை ஒழித்து தழும்பின்றி குணப்படுத்தும். எல்லா மருந்து வியாபாரிகளாலும் ரூ. 1 அல்லது 2—4 வீதம் விற்கப்படுகின்றது. ஜாம்-பெக் ஸோப் ரூ. 1. ஜாம்-பெக் பவுடர் ரூ. 1. ஏஜண்டுகள்:— மெஸர்ஸ் தாதா & கம்பெனி, பி.டி. மதராஸ்.




எப்பொழுதும் ஜாம்-பெக் உபயோகியுங்கள்

# ZAM-BUK

மிருகக் கொழுப்பற்றது.

நங்கையின் நன்றி



# லோத்ரா

கர்பாசய ரோக நிவாரணி

கர்ப்பாசயக் கோளாறுகளால் அவஸ்தைப்பட்ட பின் லோத்ரா அவளுக்கு புத்துயிரும் ஆரோக்கியமும் அளித்தது.



★

கேசரி குடீரம் லிட்., மதராஸ்

ஹைதராபாத் சமஸ்தானங்கள், ஆந்திர ஜில்லாக்கள் தமிழ்நாட்டிற்கு ஏஜண்டுகள்:

சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்,

செகந்திராபாத் — பெஜவாடா — மதுரை.




## Rgd. No. 2221.

25 வருஷமாய் தென்னாடு முழுவதும் பிரசித்தி பெற்று வரும்

## சேலம் மூன்று தாமரை பீடிகளை

உபயோகித்து சந்தோஷமடையுங்கள்.

Prop: S. அஹமத் உசேன், கோட்டை, சேலம். S.I.R.

## காந்தி ஜோஸியர்



ஒருவருஷப்பலன் மாதவாரி எழுத ரூ. 5. ஆருடம் 5. கேள்விகளுக்கு பதில் ரூ. 1. வி.பி. அணா 5. ஜனன கால விவரம் OR எழுதும் நேரம் தேவை. ஹனுமான் ஆச்ரமம், திருத்தணி S.I

மஹாபாரத ஸாரம்
பக்கம் 18

# சுதேசமித்திரன்

வாரப் பதிப்பு

வளர்ந்த வாஞ்சை
பக்கம் 22

வியஷு சித்திரைமீ 16உ  1946ளு ஏப்ரல்மீ 28உ

## தலைவர் தேர்தல் முடிவு

இந்தியாவிலுள்ள பிறமாகாணங்களுக்கெல்லாம் அநேக விஷயங்களில் வழிகாட்டியாகவிருக்கும் மாகாணம் சென்னை. காங்கிரஸ் மந்திரிசபை அமைக்கும் விஷயத்தில் மட்டும் அது பிந்திக்கொண்டுவிட்டது துரதிருஷ்டகரமானதுதான். என்றாலும் சென்றவாரம் ஒரு வழியாகச் சென்னைசட்டசபைக் காங்கிரஸ் கட்சித்தலைவர் தேர்தல் தீர்ந்துவிட்டது. தலைவரைத் தெரிந்தெடுப்பதுபற்றி எழுந்த பிரச்னைகள் குறித்துத் தீவிர விவாதம் எழுந்தது. ஸ்ரீமான் டி. பிரகாசம் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டுவிட்டமையால் பழைய வாதங்களைப்பற்றி பிரஸ்தாபிப்பதோ, மீண்டும் அவற்றை அலசிப்பார்ப்பதோ அனாவசிய வேலை. ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் குறிப்பிடுவதவசியம். சென்னையில் காங்கிரஸ் கட்சிக்கு தலைவரைத்தெரிந்தெடுப்பதில் ஏற்பட்ட தாமதத்தைப்பற்றி பார்லிமெண்டில் ஒரு அங்கத்தினர் துடுக்காகப்பேசினார். இந்த வாய்த்துடுக்குக்கு இடம்கொடுக்காமல் சென்னை மாகாணம் நடந்துகொண்டிருக்கலாமென்றாலும், இந்தியர்களை மட்டமாகக் கேவலப்படுத்தக்காத்திருக்கும் ஒரு கும்பலிடம் நாம் எந்த சந்தர்ப்பத்திலும் இதுபோன்ற இழிசொல்களைத்தான் எதிர்பார்க்க முடியும்.

தலைவர் தேர்தல் இவ்வளவு தூரம் தாமதப்பட உண்மையில் காரணமென்ன? முக்கியமாக காங்கிரஸ் மேலதிகாரிகள் இதில் தனிப்பட்ட சிரத்தை காட்டி வந்திருப்பதன் கருத்தென்ன? மாகாண பிரதிநிதிகளின் உரிமைக்குப் பங்கம் விளைவிக்கும் ஒரு ஏற்பாட்டை அவர்கள்மீது சுமத்திவிடவேண்டுமென்பதா? சிறிதுமில்லை. அதற்குமாறாக அவ்வுரிமையில் குறுக்கிடும் எண்ணம் தங்களுக்குக் கிடையாதென்பதை அவர்கள் ஆரம்பத்திலிருந்தே தெளிவாக்கி வந்திருக்கின்றனர். மாகாணப் பிரதிநிதிகள் இவ்விஷயத்தைத் தங்கள் இஷ்டம்போல் முடிவு செய்து கொள்ளலாமென்பதில் அவர்கள் சிறிதும் சந்தேகத்துக்கு இடம் வைக்கவில்லை. இறுதியாக அப்பிரதிநிதிகள் தங்கள் இஷ்டம்போலவே முடிவு செய்திருக்கின்றனர். பிரச்னையின் தன்மையை யுணர்ந்த யாரும் தலைவர் தேர்தல் சில தினங்கள் தாமதப்பட்டது கண்டு ஆச்சரியமடைவதற்கில்லை. ஆனால் மற்ற மாகாணங்களைப்போல் இங்கும் தலைவர் தேர்தல் ஒருமுகமாக நடந்தேறாது போட்டி ஏற்பட்டது. பிரதிநிதிகள் வாக்களித்துள்ள வகையும் ஒரு விபரீதமென்றே சொல்ல வேண்டும். காங்கிரஸ் மேலதிகாரிகளின் யோசனையை ஏற்றிருந்தால், இதற்கு இடமில்லாமல் போயிருக்கும்.

இன்று இதைப்பற்றி மேற்கொண்டு சர்ச்சை நடத்துவதில் பயனில்லை. தற்போதைய நிலைமைக்கு முக்கியமாகத் தமிழ்நாட்டையே சேர்ந்த சிலர் சென்ற சில மாதங்களாகக் கையாண்டு வந்திருக்கும் முறையே காரணமாகும். நமது கவன முழுவதையும் உடனடியாகக் கவர வேண்டிய பிரச்னைகள் வேறு. தற்போது மாகாண மக்களுக்கு உள்ள இன்னல்கள் அநேகம். முக்கியமாக நாட்டிலுள்ள உணவு நெருக்கடியின் கோரஸ்வரூபம் ஜனங்களின் பிரதிநிதிகளாக வரும் மந்திரிகளை எதிர் நோக்கியிருக்கிறது. அதைச் சரிவரச் சமாளிப்பதற்குத் திறமை வேண்டும்; தீர்க்க தரிசனமும் அவசியம். அடுத்த வாரத்தில் சென்னையில் அத்தகைய பொறுப்பை ஏற்கும் மந்திரிசபை அமைந்துவிடும். அவற்றைப் பரிகரிக்க முற்படுவதே முதல் வேலையாகும். ஸ்ரீ பிரகாசத்தின் தலைமையில் அமையும் அம் மந்திரிசபை உடனேயே அதில் மும்முரமாக ஈடுபட வேண்டும்.

# அந்நிய மந்திரிகள் மகாநாடு

பிரிட்டிஷ், அமெரிக்க, ரஷ்ய, பிரஞ்சு அந்நிய மந்திரிகள் மகாநாடு இவ்வாரம் பாரிஸில் கூடுகிறது. இன்னும் சில தினங்களில் நடைபெறவிருக்கும் சமாதான மகாநாட்டின் முன் சமர்ப்பிக்க வேண்டிய சமாதான உடன்படிக்கைகளின் நகல்களைத் தயாரிப்பதே அவர்களுடைய முக்கியவேலை. அம்மகாநாட்டில் 21 தேசங்களின் பிரதிநிதிகள் கலந்து கொள்ளவிருக்கின்றனர். சமாதான உடன்படிக்கைகள் தயாரிப்பதில் பல சிக்கல்கள் இருக்கின்றன. முக்கியமாக இத்தாலியைப் பொறுத்த பிரச்னையில் வல்லரசுகளுக்குள் தீவிர அபிப்பிராயபேதமிருந்து வருகிறது. உதாரணமாக முன்பு இத்தாலியின் காலனியாக இருந்த டிரிபோலிடானியாவை தன்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்று ரஷ்யா வற்புறுத்துகிறது. ஆனால் மற்றவல்லரசுகள் அதற்குஇணங்கவில்லை. அத்தகைய தகராறுகள் சமரசமாகத்தீருமா அல்லது அவை தீர வழியின்றி வல்லரசுகள் மாஜி எதிரிநாடுகளுடன் தனித்தனியாக சமாதான உடன்படிக்கைகள் செய்து கொள்ள முற்படுமா என்பது தெரிய வேண்டும்.

### சர்க்கார் ஊழியர் வேலை நிறுத்தம்

பாலஸ்தீனத்தில் சென்ற பத்து தினங்களாக சர்க்காரைச் சேர்ந்த 50000 ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர். இதில் அராபியர்கள் மட்டுமின்றி யூதர்களும் சேர்ந்திருக்கிறார்கள். அவர்கள் ஒரு பெருங் கூட்டமாகக் கூடி சர்க்கார் காரியாலய வாயிலுக்குச் சென்று "எங்களுக்கு உணவுவேண்டும்" என்ற கோஷத்துடன் ஆர்ப்பாட்டம்செய்தனர். போலீஸாரும், துருப்புகளும் வந்து அக்கூட்டத்தைக் கலைத்தார்கள். இதற்கிடையில் அவர்களது கோரிக்கைகளை ஏற்கும் முறையில் சர்க்காரிடமிருந்து சில யோசனைகள் வெளியாகியிருக்கின்றன. அவைகளைப் பற்றி வேலை நிறுத்தத் தலைவர்கள் ஆலோசித்து வருகின்றனர்.

### அஸர்பைஜானுக்கு சுய ஆட்சி?

வட பெர்ஷிய மாகாணமான அஸர்பைஜானுக்கு ஓரளவு சுய ஆட்சி அளிக்கும் முறையில் பெர்ஷிய சர்க்கார் ஒரு அறிக்கை விடுத்திருக்கின்றனர். ஆனால் முக்கிய விஷயங்களில் மேலதிகாரம் இனியும் பெர்ஷிய சர்க்காரிடமே இருந்து வரும். இந்த சீர்திருத்தத் திட்டத்தைக் கண்டு அஸர்பைஜான் சர்க்கார் திருப்தியடைந்து விடுவரெனத் தோன்றவில்லை. ரஷ்ய ஆதரவு தங்களுக்கு உண்டு என்ற நம்பிக்கை அவர்களுக்கு நீடிக்கும் வரை, பெர்ஷிய சர்க்காரின் மேலதிகாரத்திலிருந்து விடுபட அவர்கள் தங்களாலானவரை முயல்வது திண்ணம்.

### யு. எஸ். விமானம் மீது குண்டுப் பிரயோகம்

வியன்னு நகருக்கருகே ஒரு அமெரிக்க விமானத்தின் மீது நான்கு ரஷ்ய யுத்த விமானங்கள் குண்டுப் பிரயோகம் செய்ததாக ஒரு செய்தி கிடைத்திருக்கிறது. தனது விமானத்தை ரஷ்ய விமானங்கள் நெடுந்தூரம் துரத்திக் கொண்டுவந்ததாக அமெரிக்க விமானி குறிப்பிட்டார்.

### பாலஸ்தீனத்தில் பிரிவினையில்லை

பாலஸ்தீனம்பற்றி விசாரணை நடத்திய ஆங்கிலோ - அமெரிக்கக் கமிஷன் தனது அறிக்கையைப் பூர்த்தி செய்து விட்டது. அதில் கீழ்க்கண்ட முக்கிய சிபார்சுகள் அடங்கியிருப்பதாகத் தெரிகிறது:

ஐக்கிய தேச தர்மகர்த்தா சபை ஏற்பட்டவுடன் பாலஸ்தீனம் அதன் வசம் ஒப்படைக்கப்பட வேண்டும். அதுவரை அந்நாடு தற்போது போல் மாண்டேட் ஆட்சியில் இருந்து வர வேண்டும். ஒரு லட்சம் யூதர்கள் உடனேயே பாலஸ்தீனத்தில் குடியேற வசதியளிப்பது அவசியம்.

பாலஸ்தீனத்தைத் துண்டாடுவதை ஆதாரமாகக் கொண்ட எல்லா யோசனைகளையும் அக்கமிஷன் நிராகரித்து விட்டதாகத் தெரிகிறது.

தங்களுக்கென்று பாலஸ்தீனத்தில் ஒரு தனி ராஜ்யம் ஸ்தாபிக்க வேண்டுமென்ற கோரிக்கை நிராகரிக்கப்பட்டு விட்டதால் யூதர்கள் அக்கமிஷனின் சிபார்சுகளை ஒப்புக்கொள்ளமாட்டார்களென்று சொல்லப்படுகிறது.

### சாம்ராஜ்ய மந்திரிகள் மகாநாடு

சாம்ராஜ்யப் பிரதம மந்திரிகள் மகாநாடு சென்ற செவ்வாயன்று லண்டனில் ஆரம்பமாயிற்று. பிரிட்டிஷ் பிரதம மந்திரி தலைமை வகித்தார். அம்மகாநாட்டில் பிரிட்டன், கனடா, தென்னுப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, நியுஸிலாந்து ஆகிய ஐந்து நாடுகள் கலந்துகொண்டிருக்கின்றன. அதில் சாம்ராஜ்ய வர்த்தகம், பாதுகாப்பு, பிரான்ஸ். போன்ற மற்ற ஏகாதிபத்திய நாடுகளுடன் ஒத்துழைத்தல் முதலிய விஷயங்களைப்பற்றி, ஆலோசிக்கப்படும். சாம்ராஜ்ய நாடுகள் உலகின் பல்வேறு பாகங்களில் மூலஸ்தானங்கள் போல் அமைந்திருப்பதால் அவை ஒத்துழைப்பதன் மூலம், மற்ற இரு வல்லரசுகளுக்குக் குறைந்ததல்லாத செல்வாக்கைப் பெற முடியுமென்று ஒரு பிரிட்டிஷ் பத்திரிகை கூறுகிறது.

### முஸோலினி பிரேதம் எங்கே?

மிலானில் ஒரு கல்லறையிலிருந்து முஸோலினியின் பிரேதத்தை யாரோ எடுத்துக் கொண்டு போய் விட்டதாக அந்நகர நிர்வாகிகள் அறிவிக்கின்றனர். குற்றவாளிகள் யாரென்று கண்டு பிடிக்க விசாரணை நடந்து வருகிறது.

---

# அட்டைப்படம்

★

சென்னை சட்டசபை காங்கிரஸ் கட்சித் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டுள்ள ஸ்ரீ தங்குடுதூரி பிரகாசம் ஒத்துழையாமை இயக்கத்தில் சேருவதற்கு முன்னதாக சென்னையில் வெற்றிகரமாக பாரிஸ்டர் தொழில் நடத்திவந்தார். ஏராளமாக சம்பாதித்தார். "ஸ்வராஜ்யா' பத்திரிகையை ஆரம்பித்து, அதன் ஆசிரியராக இருந்தார். இப்பத்திரிகை ஆங்கிலத்திலும், தமிழிலும் சில வருஷகாலம் பிரசுரிக்கப்பட்டு வந்தது.

1926-ம் வருஷம் முதல் 1930-வரையில் ஸ்ரீ பிரகாசம் மத்திய அசெம்பிளி மெம்பராக இருந்தார். காங்கிரஸ் ஆக்ஞைப்படி அவர் தமது ஸ்தானத்தை ராஜினாமா செய்து 1930-ம் வருஷத்திய ஸத்யாக்ரஹ இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டார். உப்புச்சட்டத்தை மீறியதற்காக சிறைவாசம் புகுந்தார். பிறகு இரண்டு வருஷகாலம் சிறைத் தண்டனையை அநுபவித்தார்.

1935-ம் வருஷம் அவர் ஆந்திர மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவரானார். கடந்த முப்பது வருஷங்களாக அவர் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி மெம்பராக இருந்துவருகிறார்.




1937-ம் வருஷம் ஜூலை மாதத்தில் சென்னையில் ராஜாஜியைப் பிரதமராகக் கொண்டு ஏற்பட்ட காங்கிரஸ் மந்திரி சபையில் ஸ்ரீ பிரகாசம் ரெவின்யூ மந்திரியாக பதவி வகித்தார். அப்போது எஸ்டேட் நிலச் சட்ட விசாரணைக் கமிட்டி தலைவராக இருந்து அவர் ரிப்போர்ட்டைச் சமர்பித்தது குறிப்பிடத்தக்கவிஷயம். கமிட்டியின் சிபார்சுகளை ஸர்க்கார் யோசித்து அமுலுக்குக் கொண்டு வருவதற்கு முன்னதாக காங்கிரஸ் மந்திரி சபை வெளியேறிவிட்டது. கிராமப் பஞ்சாயத்துகளுக்குப் புத்துயிரளிக்கும் விஷயத்திலும் ஸ்ரீ பிரகாசம் மிகுந்த சிரத்தை காட்டினார்.

யுத்த சமயத்தில் ஸ்ரீ பிரகாசம் இரண்டு தடவை சிறைப்படுத்தப்பட்டு சுமார் நான்கு வருஷங்கள் சிறையில் இருந்தார். 1945 ஜூலை 7-ந் தேதி அவர் விடுதலையானார்.

1926-ல் ஸ்ரீ பிரகாசம் பர்மாவுக்கும், மலேயாவுக்கும் விஜயம் செய்து அங்குள்ள இந்தியரின் நிலைமையை நன்கு அறிந்தார். அட்டையை அவரது படம் அலங்கரிக்கிறது.



ஸ்திரீகள் உரிமைபற்றிய ஸர்வதேச ஸ்தாபனத்தின் உப கமிட்டிக் கூட்டத்தில் கலந்துகொள்ள அமெரிக்கா செல்லும் மிஸஸ் ஹன்ஸா மேத்தாவுக்குப் பம்பாயில் ஓர் உபசாரம் சென்ற வாரம் நடந்தது. மிஸஸ் மேத்தா எழுந்து பேசுகிறார். —பி. பி. ஏ.

ஸ்ரீ ஜகதீஷ் பிலிம்ஸாரின்

# லவங்கி

## புது வருஷ விருந்து...

*Direction*... V. V. RAO

நடிகர்கள

| | |
|---|---|
| Y. V. ராவ், | ருக்மணி, |
| பந்துலு, | ஜயம்மா, |
| ரங்கசாமி, | ஜயகௌரி, |
| சாரங்கபாணி, | செல்லம், |
| ராமச்சந்திரன், | பானுமதி |

முதலியோர்.



கதை வசனம்;

**P. R. நாராயணன் M. A.**

ஸ்டுடியோ: நியூடோன்.

பாட்டுகள்: பாபநாசம் சிவன்.

*World Rights Controlled by* **CHANDRALEKHA FILMS**




தமிழ்நாடு பத்திரிகைக்காரர் ஸம்மேளனத்தின் சார்பாக நிர்மாணிக்கப்படவிருக்கும் "கிளப்" உதவிக்கெனச் சென்ற வாரத்தில் மயிலை ரஸிகரஞ்சனி சபையில் நடைபெற்ற கச்சேரிகள் ஒவ்வொன்றிலும் வித்வான்கள், தங்களுடைய முழு மனதையும் ஈடுபடுத்தினர். தேக நலத்தைப் பொருட்படுத்தாமல், குறிப்பிட்ட தேதிகளில் ஏற்கனவே ஏற்றுக்கொண்டிருந்த நிகழ்ச்சிகளைக்கூட ஒத்தி வைத்துக்கொண்டு இக்கச்சேரிகளில் அவர்கள் கலந்துகொண்டார்கள் என்றால், அது, பத்திரிகைக்காரர்களிடத்தில் அவர்கள் கொண்டிருக்கும் மதிப்பு, சிரத்தை இவற்றைத்தான் குறிக்கும்.

## ஸ்ரீ சித்தூர் பிள்ளை



ஸ்ரீமான் சித்தூர் சுப்பிரமண்ய பிள்ளை செழுமையான ஞானமுள்ளவர்; ஞான விசேஷங்கள் பொதிந்த அவருடைய பாட்டு, சென்ற 17-ந்தேதியன்று மாலை நடைபெற்றது. ஸ்ரீமான் பிள்ளை வழக்கம்போன்று அபூர்வ ராகங்களுக்கு முக்கியம் கொடுத்துப் பாடியதோடு, தோடியில் அழகாகப் பல்லவி பாடினார்; லய விசேஷங்களை அநேகம் சந்தர்ப்பங்களில் வெளிப்படுத்தினார். ஆனந்த பைரவி, மாண்ட் ஆகிய ராகங்களில் அவர் அன்று உருப்படிகள் பாடியது கச்சேரியின் தரத்துக்குச் சிறப்பூட்டின. ஸ்ரீமான் பிள்ளை அவர்களுடைய கச்சேரிக்குப் பக்க வாத்தியம் வாசித்தவர்கள் அனுபவஸ்தர்கள், ஆற்றல் மிகுந்தவர்கள், அறிஞரின் பாட்டுக்கு அவர்கள் அனுசரணையாக வாசித்தது இயற்கை.

## ஸ்ரீ ஜி. என். பி.



18-ந் தேதி ஸ்ரீமான் ஜி. என். பாலசுப்பிரமண்யம் பாடினார். கும்பகோணம் ஸ்ரீமான் ராஜமாணிக்கம் பிள்ளை பிடில்; பாலக்காடு ஸ்ரீமான் மணி ஐயர் மிருதங்கம். ஸ்ரீமான் பாலசுப்பிரமண்யத்துக்கு ஸங்கீதத்திலுள்ள திறமை, அதை அவர் வெளிப்படுத்தும் விதரணை இவற்றைப் புதிதாக உணர்த்தத் தேவையில்லை. அன்றிருந்த அவருடைய தேக நிலைமையை உணர்ந்தவர்கள் அவர் செய்த கச்சேரியைப்பற்றிச் செய்யக்கூடிய முடிவில் வேற்றுமையிராது; அவர் பாடிய ராகங்களில் சிறந்து விளங்கியது மோஹனம். ஸ்வரப் பிரஸ்தாரத்திலுள்ள வேகம், விருவிருப்பு இவற்றை "ஜானகிரமண" கீர்த்தனையின் சரணத்தில் இடம்பெறக் கண்டோம். சமய சந்தர்ப்பத்துக்கு அனுசரணையாகச் சாரீரத்தை எப்படிப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்ற விவேக பூர்வமான உணர்ச்சி, அவர் கன ராகமாக எடுத்துக்கொண்ட தோடியில் தெளிவாயிற்று.

ஸ்ரீமான் ராஜமாணிக்கம் பிள்ளையும், ஸ்ரீமான் மணி ஐயரும் 'கைகாரப்' பேர்வழிகள். எனவே அவர்கள் புரிந்திருக்கக்கூடிய ஒத்துழைப்பைப்பற்றி எதைக் குறிப்பிட்டாலும் பொருந்தும்.

## ஸ்ரீ செம்மங்குடி



'ராஜ்ய ஸேவாநிரத' செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீனிவாஸய்யருக்கும், பத்திரிகைகளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. பத்திரி

கைக்காரர்களின் பொறுப்பையும், மதிப்பையும் அவர் நன்கு உணர்ந்தவர். எனவே, பொறுப்புள்ளவர்கள், பொறுப்பான ஒரு காரியத்தை நிறைவேற்ற முற்பட்டிருப்பதால் அவர் தம்முடைய பொறுப்பை அலட்சியம் செய்யாமல்ஸம்மேளனஸீரீஸின் கடைசித் தினத்தன்று கச்சேரி செய்தார். ஸ்ரீமான் ஸ்ரீனிவாஸய்யர் பத்திரிகைக்காரர்கள் விஷயத்தில் காட்டும் பரிவுக்கு ஓர் அறிகுறியாகவே அவரது விஜயத்தைக் கருத வேண்டும். தேக நலத்தைச் சற்றும் எண்ணிப்பாராமல் அவர் வந்ததே பெரிது; அதோடு கச்சேரி செய்தது அதைவிடப் பெரிது.

ஸ்ரீமான் ஸ்ரீனிவாஸய்யரின் அன்றைய கச்சேரி சுருக்கமானதுதான்; ஆனால், சுவை நிறைந்தது. மங்களகரமானதும் கூட! அவரது பாட்டை அன்று கேட்டவர்கள் அவருக்குத் தேக சுகமில்லை யென்றதை நம்பமாட்டார்கள். உற்சாகமும் உணர்ச்சியும் மிகும்போது, அவற்றிற்கு எதிராக உடல்கோளாறு எதிர்த்து நிற்க இயலவில்லைபோலும். ஸ்ரீமான் செம்மங்குடி பாடிய 2¼ மணி நேரத்தில் பூர்வ கல்யாணியின் பூரிப்பைக் கண்டோம்; ஹிந்தோளத்தின் எழில் புலப்பட்டது; ஸ்ரீ பொன்னையா பிள்ளை இயற்றிய சங்கராபரண கீர்த்தனையின் சுக நய விசேஷங்கள் வெளி வந்தன. வராளியும், கல்யாணியும் எதை எது மிஞ்சியது என்று நிர்ணயிக்க முடியாத வகையில் அமைந்தன. பல்லவியும், அதைத் தொடர்ந்த ஸ்வர ஆவர்தனங்களில் புகுந்த கன்னடா, பலஹம்ஸா, பேஹாக் ஆகிய ராகங்கள் அற்புதமாக விளங்கின.

ஸ்ரீமான் சேதுராமய்யாவும், சென்னை ஸ்ரீமான் கண்ணனும் முறையே பிடிலிலும், மிருதங்கத்திலும் தங்களுடைய திறமையையும் வலுவையும் வெளிப்படுத்தினர்.

---

# தமிழ்நாடு பத்திரிகைக்காரர்கள் மகாநாடு



தமிழ்நாடு பத்திரிகைக்காரர் ஸம்மேளனத்தின் 5-வது மகாநாடு சென்ற வாரம் 20, 21-ந் தேதிகளில் சென்னை நகரில் நடைபெற்றது. "ஹிந்து" பத்திரிகையின் துணை ஆசிரியர் ஸ்ரீமான் என். ரகுநாத ஐயர் தலைமை வகித்தார். இம் மகாநாட்டுக்குத் தென்னிந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்து நிருபர்களும், எழுத்தாளர்களும் விஜயம் செய்திருந்தனர். பத்திரிகைக்காரர்களின் நிலைமையையும், பொறுப்பையும் எடுத்துரைத்து, அரிய யோசனைகளை வெளியிட்டார் மகாநாட்டின் தலைவர்.

2

# அலமுவின் கடிதங்கள்

என். எஸ். ஸ்ரீ.

அன்புள்ள அம்மாவுக்கு அலமு நமஸ்காரம் செய்து எழுதியது.

நேற்று வீட்டில் ஒரே ரகளை. 'அவர்' (கணவர்) என் மேல் அப்படிப்பட்ட ஆசையாய் இருக்கிறார். நடந்தால் கால் தேய்ந்துவிடும் என்கிறார். நல்ல படிப்பு படித்து நாலு பேருடன் பழகுகிறாரல்லவா? முந்தாநாள் சாயங்காலம் ஆபீஸிலிருந்து ஒரு மணி முன்னதாகவே வந்துவிட்டார். சீக்கிரம் 'டிரெஸ்' செய்துகொள்' என்றார். ஏன்? எதற்காக என்று கேட்டேன். இன்று பீச்சுக்குப் போய் வருவோம் என்றார். அவசரம் அவசரமாய்ச் சமையலைச் செய்து வைத்துவிட்டு, சின்ன நாத்தனார் சௌந்தரத்தையும் அழைத்துக்கொண்டு சமுத்திரக் கரைக்குப் போனோம். பெண்டுகளிடையே ஏற்பட்டிருக்கும் நாகரிகஅபிவிருத்தியை அறிய சங்கீதக் கச்சேரி, சினிமாக் கொட்டகை, சமுத்திரக்கரை இவைகளுக்குப் போனால்போதும். அத்தனைப் பேர்களில் அவள்—அது யாரோ எனக்குத் தெரியாது—உடுத்தியிருந்த அந்தப் புடவை அவளுக்கு அவ்வளவு எடுப்பாயிருந்தது. சிறிது நேரம் அவள் உடுத்தியிருந்த புடவையை விரைத்துப் பார்த்தேன். வெள்ளை உடலில் நீலமும் பச்சையும் கலந்த கோடுகள் போட்ட பார்டர். நடுவில் சித்திர வேலைகள். 'பிரிண்டட் ஸாரியில்' ஒருவிதம். உண்மையிலேயே அது நன்றாக இருந்தது.

"என்ன, அதைவிட்டுக் கண்களை அப்பால் எடுக்கமாட்டாய்போலிருக்கிறது?" என்றார் அவர் சிரித்துக்கொண்டே.

"உண்மையிலேயே அந்தப் புடவை நன்றாக இருக்கிறது" என்றேன்.

"அநேகமாக இப்பொழுதெல்லாம் இந்தப் புடவையைத்தான் அதிகமாக உடுத்துகிறார்கள்" என்றார் அவர்.

"ஆமாம் அண்ணா! ராமசாமி ஆம்படையாள் கூட நேற்று இதே மாதிரி ஒன்று வாங்கிக் கொண்டு வந்திருக்கிறாள் என்றாள் சௌந்தரம்.

✱

அதற்கு மேல் அவர் ஒன்றும் சொல்லவில்லை. சிறிது நேரம் வேடிக்கையாகப் பேசி விட்டுப் போகலாமென்று மணலில் உட்கார்ந்தோம். யாரோ அவருக்குத் தெரிந்தவர்கள் வந்தார்கள். ஆபீஸ் துரையின் அக்ரமத்தில் ஆரம்பித்து, ரஷ்யாவின் யுத்த பூச்சாண்டியில் போய் முடித்து ஏழரை மணி வரையில் பொழுது போனது கூடத் தெரியாமல் பேசித் தீர்த்துவிட்டார்கள். பக்கத்தாத்து பட்டு சொன்னது ரொம்ப சரி என்பதுஇப்பொழுதுதான் தெரிந்தது.

"என்ன மாமி! ஜம்பமாய் அவர்களுடன் பீச்சுக்குப் போகிறோம் என்கிற பேர்தான். அங்கே போனால் கலியாணப் பெண் மாதிரி நாம் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும். அவர் சிநேகிதர்களுடன் பொழுது போனதுகூடத் தெரியாமல் பேசிக்கொண்டிருக்க வேண்டியதுதான். வருகிறவர்கள் தானாகட்டும், ஜாடையாய்ப் பார்க்காததுபோல் போய்விடலாமோல்லியோ. என்னப்பா, ரங்காச்சாரி, சர்ச்சில் பேச்சைப் பார்த்தாயல்லவா? என்று தலை வெடித்து விடுகிறமாதிரி தோளில் தட்டிக் கொண்டு இவர்களுடன் அரசியல் விஷயம் பேச வந்துவிடுவார்கள். அதான் எனக்கும் பீச்சுக்குப் போகவே பிடிக்கிறதில்லை' என்கிறாள் பட்டு. அவள் சொல்வது அத்தனையும் உண்மை என்று இப்பொழுது தெரிந்தது.

அதெப்படியாவது போகட்டும். நேற்று சாயங்காலம் ஆபீஸிலிருந்து, வந்தவர் குடுகுடுவென்று சமையலறைக்கு ஓடி வந்து 'இந்தா பிடி' என்று ஒரு பையை என்னிடம் கொடுத்தார். பையினுள் என்ன இருந்ததென்று நினைக்கிறாய்? நேற்று பீச்சில் பார்த்ததாய்ச் சொன்ன இந்தப் புடவைதான். 'வெள்ளிக்கிழமையாய் இருக்கிறது. உம். உடுத்திக்கொள். ஆனால் அம்மா, யாராவது கேட்டால் நான் வாங்கிக் கொடுத்தேன் என்று சொல்லாதே. ஊரிலிருந்து உன் அண்ணா வாங்கிக்கொடுத்தனுப்பியதாகச் சொல் என்றார். இந்தக் கோழைத்தனம்தானே என்னைக் கொலை செய்கிறது!

சரி, அவ்வளவு ஆசையாய் வாங்கிக் கொடுத்தாரே என்று அதை உடுத்திக்கொண்டு, மாமியாரைப் போய் ஸேவித்தேன்.

"என்னடி இது?" என்றாள் மாமியார்.

"அண்ணா வாங்கிக் கொடுத்தனுப்பினான்" என்றேன்.

"நன்றாக இருக்கிறது! கோவிலுக்கு எதிர் வீட்டிலிருந்து கொண்டு 'அச்சோன்யம்' மாதிரி இந்த வெள்ளைப் புடவையை உடுத்திக்கொள்ள வேண்டும் என்று தோன்றியதே. இந்தக் காலத்திலே விதவைகள் கூட வெள்ளைப் புடவைகள் உடுத்திக்கொள்ள மாட்டேன் என்கிறார்கள். நன்றாகத்தான் இருக்கிறது நாகரிகம்! அண்ணா வாங்கிக் கொடுத்தானும். வெட்கமில்லாமல் உடுத்திக்கொண்டு ஸேவிக்க வந்துவிட்டாள்" என்று ஒரு உலுக்கு உலுக்கினாள்.

என் பாடு நடு நடுங்கிவிட்டது. வீட்டோடு எல்லாம் ரொம்ப கர்நாடகம். கோணல் வகிடு எடுத்துக் கொண்டால் கூட அமர்க்களம் தான். அவ்வளவென்ன! அன்றொரு நாள் வேலையெல்லாம் முடித்துவிட்டுப் பொழுது போகவில்லை. கூடத்தில் உட்கார்ந்து பாடிக்கொண்டிருந்தேன் எங்கோ வெளியே போயிருந்த மாமியார் அப்பொழுதுதான் அங்கே வந்தாள். 'நன்றாக இருக்கிறது! லோகத்திலே கல்யாணம், கார்த்தி என்றால் பாடுவார்கள். அதுவும் நூறுதரம் வேண்டி, வேப்பிலை அடித்துக் கேட்ட பிறகுதான். இது ஒன்றும் தேவடியாள வீடு இல்லை. எப்பொழுது பார்த்தாலும் பாடுவதற்கு, என்று கடிந்து கொண்டார்.

—அடுத்த பக்கம்

# பழனி ஸ்ரீ முத்தையா பிள்ளை

**பிடில் வித்வான் மருங்காபுரி கோபால கிருஷ்ண அய்யர் எழுதியது**

கர்நாடக சங்கீதத்தில் லய சம்பந்தமான ஆராய்ச்சியில் புதுக்கோட்டை கஞ்சிரா மகா வித்வான் ஸ்ரீமான் மான் பூண்டியா பிள்ளை அவர்கள் தான் ஈடுபட்டு கட்டுப்பாடுகளை நிர்ணயித்தவர். அப்பேர்ப்பட்ட லய ஞானியின், சிஷ்யர் ஸ்ரீமான் பழனி முத்தையா பிள்ளை. அன்னாரின் லய உபதேசத்தைப் பரம பிரேமையுடன், சகல விநயமான பாகங்களையும் கற்று மகா பிரக்யாதியாய் விளங்கி வந்தவர் பழனி ஸ்ரீமான் முத்தையா பிள்ளை. தன் குருநாதனுக்குப் புதுக்கோட்டையில் கோவில் கட்டி, அதில் தன் குருநாதன் ஆபத் சந்யாசியாகி முருகாநந்த சுவாமிகள் திருநாமத்துடன் சித்தியடைந்த இடத்திலேயே பிரதிஷ்டை செய்துள்ளார்.

இதில் இரண்டு முக்கிய விஷயங்களைச்சொல்லவேண்டியிருக்கிறது. அதாவது கர்நாடக சங்கீதத்தின் வித்வத் பரம்பரையில் சங்கீதத்தால் பரம சாயுஜ்ய பதவியை அடையலாம் என்பதற்குக் கஞ்சிரா ஸ்ரீமான் மான் பூண்டியா பிள்ளை நிதர்சனமாக விளங்குவதுடன், அன்னாரின் மனதை அறிந்த சிஷ்யரான ஸ்ரீமான் முத்தையா பிள்ளை தன் குருநாதனுக்குக் கோவில்கட்டிக் கும்பாபிஷேகம் முதலியன செய்து வைத்தார். இதுவரை எந்த வித்வானும் அடையாத ஓர் (புனித உயர்வே) இது நமது கர்னாடக சங்கீதத்தின் பெருமையை உணர்த்துகிறது.

இரண்டாவதாக, பழனி ஸ்ரீமான் முத்தையா பிள்ளையின் குமாரர் பழனி ஸ்ரீ சுப்ரமண்ய பிள்ளை மிருதங்கத்தைப் பரம்பரை தர்மமாய் ஞானபாவத்தில் ரொம்பவும் தெளிவடைந்து, லய சம்பந்தமான கட்டுப்பாடுகளுடன் கூடிய ஓர் முறையில் பிராபல்யமாய் வாசிக்கும்படியான பாக்யத்தைப் பெற்றவர்; ஓர் வித்வானின் குமாரர் மகா வித்வானாய் ஆகியிருப்பதைப் பார்க்கிறோம். மேலே சொன்ன இரண்டு அம்சங்களும் கர்நாடக சங்கீதத்தின் மகா மேன்மையைக் குறிக்கின்றன.

காலஞ்சென்ற மகா வித்வான் பழனி ஸ்ரீமான் முத்தையா பிள்ளையின் ஆத்மா சாந்தியடைய இறைவனை வேண்டுகிறேன்.

—::—

(முன் பக்கத் தொடர்ச்சி)

“உன் குரல் வீணை மாதிரி இருக்கிறது. உன்னுடைய ஒரு பாட்டு மத்தியானம் முழுவதும் யந்திரம் மாதிரி ஓயாமல் ஆபீஸில் வேலை செய்த அலுப்பையெல்லாம் போக்கி விடுகிறது. பாடு ஒரு பாட்டு” என்று ராத்திரி மெத்தை மேல் நிலா வெளிச்சத்தில் உட்கார்ந்து பாடச் சொல்கிறார், அவர். என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. காலையில் எழுந்தவுடனே மாமியார் ஏதாவது கேட்டால் நான்தான் சொன்னேன். பாட்டு பின்னே எதற்காகக் கத்துக்கொள்கிறதாம் என்று அவர் ஒரு வார்த்தை சமாதானம் சொன்னால் எவ்வளவு அழகாக இருக்கும்! என்னமோ பைத்தியக்கார சங்கோஜம்! எட்டு வருஷம் கஷ்டப்பட்டு நூற்றுக்கணக்கில் பணத்தைச் செலவழித்து எனக்குப் பாட்டுச் சொல்லி வைத்ததெல்லாம் குட்டிச் சுவருக்குச் சொல்லி வைத்த மாதிரிதான். வியர்த்தம்தான். என்னமோ ஜன்மாந்திரத்தில் பட்ட கடன்!

இனி இந்தப்புடவையை நான் இங்கே உடுத்திக்கொள்வதற்கில்லை. நம்ப அண்ணா ரொம்ப ரஸிகன், நீ என் மாமியார் மாதிரி இல்லை. உலகம் அறிந்தவள். மன்னியின் சிகப்பு உடம்புக்கு இந்தப் புடவை நன்றாக இருக்கும். இதற்கு எடுப்பாக இருக்க கறுப்பு ஜாக்கெட்டும்கூட அனுப்பியிருக்கிறேன். மன்னியை உடுத்திக் கொள்ளச் சொல்.

இந்திரா, பின்னல் போடக் கலர் நூல் வேண்டுமென்று எழுதியிருந்தாள். இன்னும் இரண்டு வாரத்தில் ஆபீஸ் வேலையாய் ‘இவர்’ அந்தப் பக்கம் வரப் போகிறாராம். அப்பொழுது அவர் கையில் வாங்கிக் கொடுத்தனுப்புகிறேன். நம்ம தோட்டத்து மாங்காய்தான் எனக்குப் பிடிக்கிறது. முன்பு வந்திருந்த நம்ம ஆத்து ஆவக்காய் ஊறுகாயைச் சாப்பிட்டுவிட்டு இன்னமும் ஸ்தோத்திரம் செய்து மாளவில்லை ‘அவருக்கு’! அத்துடன் அவருக்கு ஆவக்காய் ஊறுகாய் என்றால் பிராணன், ஆகையால், உடனே அதிக காரமில்லாமல் கொஞ்சம் ஆவக்காய் ஊறுகாய் போட்டு அனுப்பவும்.

அதோ சௌந்தரம் வருகிறாள். ஆகையால் இத்துடன் கடிதத்தை முடித்துக்கொள்கிறேன். பொறந்தாத்துக்குக் கடிதம் எழுதுகிறாள் என்று எதையாவது எக்கச்சக்கமாய்ச் சொல்லி வைத்துவிட்டுச் சண்டையைக் கிளப்பிவிடும். கோள் சொல்வதில் எமன்!

இப்படிக்கு,
உன் அன்புள்ள,
அலமு.

# அரசியல் விளக்கம்

 எஸ். ஜே. 

**அரசியல்:**—மேதாவிகளான சிலர் இதைச் சூதாடும் இடத்திற்கு ஒப்பிடுவர். பந்தய மேடைக்கும் பொருள் காட்சிக்கும்கூட ஒப்பிடலாம் என்பது ஒரு சிலரின் அபிப்ராயம்.

**அறிக்கை:**—அரசியல் தலைவர்களுடைய பொழுதுபோக்கு: பொது ஜனங்களுடைய ஆவலைக் கிளப்பும் வஸ்து.

**அமைதி:**—இதை நிலை நிறுத்துவதற்காகத் தான் சர்க்கார் கண்ணீர்ப் புகையையும், துப்பாக்கிப் பிரயோகத்தையும் நியமித்திருக்கிறார்கள்.

**கலகம்:**—பிரிட்டிஷ் ஆட்சியின் விளைவு!

**'க்ளிக்':**—சமீபத்தில் வெகுவாக அடிபட்ட இங்கிலீஷ் வார்த்தை; போட்டோ பிடிக்கும்போது காமிராவில் இந்த மாதிரி சப்தம் உண்டாவதாகச்சொல்லப்படுகிறதுஎன்பதைத் தவிர நான் வேறொன்றும் சொல்லத் தெரியவில்லை.

**கண்ணீர்ப் புகை:**—இதைக் கண்டுபிடித்தவர் ஒரு ஸ்திரீயாக இருக்க வேண்டும். மேற்படி வாக்கியத்தில் கண்ணீர்ப் புகையை வீசுவதில் என்று சொன்னால்தான் ஒப்புக் கொள்ளுவேன்.

**காருண்யம் மிக்க சர்க்கார்:**—தர்மம் தவறிய இவர்களைக் காருண்யம் மிக்க கடவுள் காப்பாற்ற வேண்டும் என்று பரமண்டலத்திலுள்ள பிதாவை வேண்டுகிறோம்.

**சமாதானம்:**—ச-மா-தா-ன-ம். (உலக நிலைமையில் இதன் பொருள் மாறிக்கொண்டே வருகிறது.)

**சந்திப்பு:**—அரசியல் தலைவர்களில் சிநேகபாவமுள்ளவர்கள் கொஞ்சிக் குலாவுவதற்கோ, விரோத மனப்பான்மை உள்ளவர்கள் ஒருவரையொருவர் திட்டிக்கொள்வதற்கோ செய்துகொள்ளும் ஏற்பாடு; புயலுக்குப் பின் அமைதி வருவதுபோல, இதைத் தொடர்ந்து அறிக்கை வரும்.

**பலாத்காரம்:**—ஒரு ஆயுதம் (பிரிட்டிஷ் மேக்.)

**பட்ஜெட்:**—இந்தியர்களுக்கு வெட்கம், மானம், சூடு, 'சுரணை' ஏதாவது (சண்டைக்குப்பின்) மிச்சமிருக்கிறதா என்று பார்ப்பதற்காக வருஷாவருஷம் இதைத் தயாரிக்கிறார்கள். இதை வருடாந்திரப் பரீட்சை என்று சொல்வதில் ஆட்சேபம் இல்லையே?

**பார்லிமெண்ட்:**—பேச்சுப்போட்டி, காட்டா குஸ்தி இவற்றையெல்லாம் இங்கே எதிர்பார்க்கலாம்.

**பாகிஸ்தான்:**—தேசத்தைத் துண்டாக்கு, துண்டாக்காதே என்ற கோஷங்களுக்கெல்லாம் ஆஸ்பதம். இதைப்பற்றி இந்தக் கோஷத்தை எழுப்பியவருக்கே ஒன்றும் சரியாகத் தெரியாத போது நாம் ஏன் மண்டையை உடைத்துக்கொள்ள வேண்டும்?

**பிரசங்கம்:**—இரண்டு காதுகளிலும் 'இயர்-ப்ளக்'கைச் சொருகிக் கொண்டு கேளுங்கள்.

**பிரசாரம்:**—தங்கள் "நேர்மை"யையும், பிறரின் "அயோக்யத்தனத்தை"யும் வெளிப்படுத்துவதற்காக ஏற்பட்டுள்ளது; முயலுக்கு மூன்றே கால்கள்தான் இருக்கின்றன என்ற உண்மையை இதன் மூலம் ஸ்தாபிக்கலாம்.

**மெஜாரிடி மைனாரிடி:**—அண்ணன் தம்பிகளாதலால் இவற்றுள் ஒற்றுமை எங்கே இருக்கப்போகிறது?

**மகாநாடு:**—தலைவர்களெல்லாம் சேர்ந்தாற்போல ஒரு நாள் லஞ்ச் சாப்பிட்டுவிட்டுத் தமாஷாகப் பேசிக்கொண்டிருக்கலாம் என்பதற்காகச் செய்கிறார்கள் என்று விஷயந்தெரியாதவர்கள் சொல்வார்கள். இது எல்லா மகாநாடுகளுக்கும் 'அப்ளை' ஆகாது.

**மிதவாதிகள்:**—இவர்களுக்குச் சரியான உபமான வஸ்து கிடைக்கவில்லை. இதன் நேரான அர்த்தம் மிதமாய்ப் பேசுகிறவர்கள் என்றாகும். இது உண்மையானால், நம் வீட்டுக்கு வந்து காலை முதல் சாயங்காலம் வரை உட்கார்ந்து கழுத்தறுக்கும் மனிதர்கள் மிதவாதிகளாக வேண்டும் என்று இறைவனை வேண்டுகிறேன்.

**போலிங் ஆபீஸ்—வோட்டுப் போடுமிடம்:**—கல், மண், செருப்பு இவற்றையும் போடுவதுண்டு என்று சில பிரதேசத்துத் தேர்தல்களின் மூலம் தெரியவருகிறது.

**நேர்மை, தூய்மை, உண்மை:**—அரசியலுக்கும் இவற்றுக்கும் என்ன சம்பந்தம்?

**வருங்காலம்:**—'இது அரசியல் வாதிகளின் சட்டைப் பைக்குள் இருக்கிறது. வருங்காலம் க்ஷேமகரமாக இருக்கவேண்டுமென்றால், அரசியல் வாதிகளுக்கெல்லாம் கல்தா கொடுக்கவேண்டும் என்கிறார் எச்.ஜி. வெல்ஸ். 'ததாஸ்து!' என்று சொல்லிவைப்போமே!

**வாபஸ்:**—வாபஸ் வாங்கிக் கொள்ளுதல். என்ன அர்த்தம் விளங்கவில்லையா? அப்படியானால், இதை நான் வாபஸ் வாங்கிக் கொள்ள வேண்டியதுதான்!

**வெள்ளைக்காரன்:**—'உலகத்துப் போலீஸ்காரன்' பர்வதம் போல் ஸ்திரமான சுபாவத்தை உடையவன் என்று காவ்யங்கள் ராஜாக்களை வர்ணிப்பது வழக்கம். வெள்ளைக்காரனுக்கும் இது பொருந்தும். இல்லாவிட்டால், "வெளியே போ!" என்று இத்தனை நாள் கூச்சலிடுவதைக் கேட்டுக்கொண்டு அமுக்கமாய் உட்கார்ந்திருக்க முடியுமா?

**வோட்டு:**—இந்த முறைமட்டும் இல்லாமல் இருந்தால் நான்கூட பிரதம மந்திரியாகி விடுவேனே என்கிறார் திருவாளர் கறுப்பண்ண ஸ்வாமி!

**தூதுகோஷ்டிகள்:**—இந்தியாவுக்கு இத்தனை நாட்களாக இழைத்து வந்த அநீதியைப் போக்கிக்கொள்ளுவதற்காகப் பாரத வர்ஷத்தில் க்ஷேத்ராடனம் செய்யவரும் இங்கிலீஷ்கார யாத்திரீகர்கள்.

**தேசம், தேசபக்தி:**—அரசியலுக்கு மூலகாரணமே இவைகள்தான்.

**144:**—143-க்கு அடுத்த எண். 145-க்கு முந்திய எண். 12-இன் இரண்டாவது படி. எடுத்ததற்கெல்லாம் தலைகாட்டும் ஒரு இந்தியச் சட்டம். இதைப்பற்றி அதிக விமர்சனம் செய்தால், நமது சர்க்கார் இக் கட்டுரைக்கும் '144' போட்டுவிடும்.

**ஜின்னா:**—முட்டுக்கட்டைக்கு மறு பெயர். எப்படி 'ஏமரி' என்றால் 'நாஸ்தி' என்று அர்த்தமோ, அப்படியே இதையும் வைத்துக் கொள்ளலாம்.

**இந்திய பாதுகாப்புச்சட்டம்:**—ஏகாதிபத்தியப் பாதுகாப்புச் சட்டம் என்றால் இன்னும்பொருத்தமாயிருக்குமே!




# ஸ்ரீஸ்வாதித்திருநாள் சாஹித்யங்கள்

[ 'ராஜ்ய ஸேவாநிரத' செம்மங்குடி ஸ்ரீஸ்ரீநிவாஸய்யர் ஸ்வரப்படுத்தியது.]

பல்லவி

ஸாமோதம் சிந்தயாமி ஸரஸீருஹநாபம் (ஸாமோதம்)
3 4

அனுபல்லவி

சாமீகர ஸத்ருஸ சேல ராஜி தகடிம் (ஸாமோதம்)
3

சரணம் 1

முரமுக ஸகல மஹீபார நாஸனம்
2 4
நிருபம தரதண சிகரவாரி ஸீமம்
3
துரிதஸமவிராமம் பூரித நதகாமம்
3
சாருவதன ஸோமம் திவிதளித பௌமம் (ஸாமோதம்)
3 3 3 4

சரணம் 2

ஸாமஜபரிவ்ருட ஸந்தாப விபஞ்ஜனம்
4 4
தாமரஸ பாந்தவ துஹிநாம்ஸு நயனம்
3 4
ஸமபுவன பாலம் ஸாஹஸி ககணகாலம்
4 3
ஹிமகரகண்ட பாலம் கமனீயதர லீலம் (ஸாமோதம்)
2 3 2

சரணம் 3

ஸ்யானந்தூரக ரீஸோடரயமானகேஹம்
3 3 4 3
பௌரி கேரசாந மானஸாப் ஜமராளம்
3
கனகருசி வாஸம் பணிராஜ தல்ப வாஸம்
4 2
கன ஸத்ருஸ பாஸம் மானனீயம்ருது ஹாஸம் (ஸாமோதம்)
4 3 4 3

பல்லவி

| | |
|---|---|
| ஸரஸீருஹ நாபம் 4 | —ஸ்ரீ பதுமனாபப் பெருமானை |
| ஸாமோதம் 3 | —மிகவும் ஸந்தோஷத்துடன் |
| சிந்தயாமி | —(நான்) தியானிக்கிறேன் |

அனுபல்லவி

| | |
|---|---|
| சாமீகரஸத்ருஸசேல 3 | —பொன் நிறத்திற்கு நிகரான வஸ்திரத்தை |
| ராஜித கடிம் | —இடையில் அணிந்து விளங்குபவனும் ஆன ஸ்ரீ பதுமனாபப் பெருமானை நான் (தியானிக்கிறேன்) |

சரணம் 1

| | |
|---|---|
| முர முக 2 | —'முரன்' என்ற அசுரன் முதலிய |
| ஸகல் | —எல்லா |
| மஹீ பார 4 | —பூமிக்குப் பாரமாக இருக்கும் அசுரக் கூட்டங்களை |
| நாஸனம் | —அழித்தவனும் |
| நிருபம தர | —நிகரில்லாத (உவமை கூற முடியாத) |
| குணநிகர 3 | —குணக் கூட்டங்களுக்கு |
| வாரிஸீமம் | —கடல் போன்றவனும் (நற்குணங்கள் நிறைந்தவனும்) |
| துரிதஸம 3 | —சரணடைந்தவர்களின் எல்லாப் பாபங்களையும் |
| விராமம் | —அகற்றுவோனும் |
| பூரித நதகாமம் | —வணங்கும் ஜனங்களின் விருப்பங்களை நிறைவேற்றுபவனும் |
| சாருவதனஸோமம் 3 | —சந்திர பிம்பம் போல் எழில் வாய்ந்த முகத்தை யுடையவனும் |
| திவிதளித பௌமம் 3 3 4 | —துஷ்டனான நரகாசுரனைக் கொன்றவனுமான தேவனை (தியானிக்கிறேன்) |

சரணம் 2

| | |
|---|---|
| ஸாமஜ பரிவ்ருட 4 | —பக்தனான கஜேந்திரனுடைய |
| ஸந்தாப | —துன்பத்தை |
| விபஞ்ஜனம் 4 | —அகற்றியவனும் |
| தாமரஸ | —தாமரைப்பூவிற்கு |

| | |
|---|---|
| பாந்தவ<br>3 4 | —உறவினனான (மலர்ச்சியைக் கொடுப்பவனான) சூரியனேயும் |
| துஹிநாம்ஸு | —குளிர்ச்சியுள்ள கிரணங்களையுடைய சந்திரனேயும் |
| நயனம் | —கண்களாக உடையவனும் |
| ஸப்தபுவன<br>4 | —பதினான்கு உலகங்களிலுள்ள (உயிர்களை) |
| பாலம் | —காப்பவனும் |
| ஸாஹஸிகக ண<br>3 | —கொடுந் தொழில் புரியும் அரக்கர் குழாத்திற்கு |
| காலம் | —காலன் போல் உள்ளவனும் (அரக்கரைக் கொன்றவனும்) |
| ஹிமகர | —சந்திரனது |
| கண்ட<br>2 3 | —கலைபோல் அழகிய |
| பாலம்<br>2 | —நெற்றியையுடையவனும் |
| கமனீய தர | —புகழ் வாய்ந்ததும், பாவனமானதுமான |
| லீலம் | —லீலைகளையுடையவனுமான (தேவனைத் தியானிக்கிறேன்) |

சரணம் 3

| | |
|---|---|
| ஸ்யாநந்தூரநகரீ<br>3 3 | —'திருவனந்தபுரம்' என்ற இந்த தேசத்தில் |
| ஸோபாயமானகேஹ<br>4 3 | —அழகுவாய்ந்த கோயிலில் எழுந்தருளியிருப்பவனும் |
| மௌநி நிகர | —முனிவர்களுடைய |
| சாரு மானஸாப்ஜ<br>3 | —அழகிய மனத்தாமரைகளில் உள்ள |
| மராளம் | —ஹம்ஸம் போன்றவனும் (முனிவரது ஹிருதயங்களில் வசிப்பவனும்) |
| கன கருணாநிவாஸம்<br>4 | —கருணைக்கு இருப்பிடமும் |
| பணிராஜ<br>2 | —ஸர்ப்பங்களின் தலைவனான அனந்தனாகிற |
| தல்ப வாஸம் | —படுக்கையில் வாசம் செய்பவனும் |
| கனஸத்ருஸ<br>4 3 | —மேகத்தின் நிறம்போல் அழகிய |
| பாஸம்<br>4 | —காந்தியையுடையவனும் |
| மானனிய | —போற்றத்தகுந்ததும், அழகியதுமான |
| ம்ருது ஹாஸம்<br>3 | —மந்தஹாஸத்தையுடையவனுமான (பதுமனாபப் பெருமானைத் தியானிக்கிறேன்) |

**ராகம் : உதயரவிசந்திரிக [8-வது மேளத்தில் ஜன்யம்] தாளம் : சாப்பு**

ஆ: ஸகமபநிஸ்] **பல்லவி** [அவ: ஸ்நிபமகஸ.

1. ; நீ ஸா = கா ; மா ; || பா ; ப ம = பா ; பநீ , ; ||
ஸா . மோ த ம் சிந் த . யா மி
3

ஸ்ா ஸ்ா , நி = நிஸ்ாநி பா ; || மககா ; = மகபம மககா ; - ஸ ||
ஸ ர . ஸீ . . ரு ஹ . . நா. . . பம் . . . .
4

; ஸ்நி ஸா = கா ; மா ; || பா ; ப ம = பாநீ பநிஸ்ா ||
ஸா. . மோ த ம் சிந் த . = யா . மி . .
3

பா, ஸ் நிஸ்ா , ப = பநி ஸ்நி பம பா || மாபம கா ; = கம்பநி பமகஸ ||
ஸ . ர . . — ஸீ. . . ரு. . ஹ . . . நா . . . பம் . . .
4

ஸநி ஸா ; = கா ; மா ; || பநி நிபாம = ககாஸ கமபா ||
ஸா. . மோ த ம் சி ந் . த . . யா . . மி . .
3

கம பநி ஸ்க் = நிஸ்ாநி பா , க || கமபநிஸ்நி = பம கமபமகஸ ||
ஸ. ர . . . ஸீ . . ரு . ஹ . . . . . நா , . . . ப ம் . .
4

கநி ஸ்ா ; = கா மா பா ; || ; ; ; = ; ; ; ;
ஸா . . மோ . த ம்
3

**அநுபல்லவி**

; பா ; = நீ ; பா நீ || ஸ்ா ; ஸ்நி = ஸ்ா ; ஸ்ா ||
சா மீ க . ர ஸ . த்ரு ஸ
3

ஷி ஷி = ஷி ஷி || ஸ்ா ; ஸ்ா = ஸ்ாக்க்ஸ்நிஸ்ா ||
சா மீ க ர ஸ த்ரு . . ஸ . .
3

; பா நிப = பநி ஸ்நி பம கம || பநிஸ்ா ஸ்நி = ஸ்ா ; ஸ்ா , ம் ||
சா . . மீ . . . க . . . ர . . ஸ . த்ரு ச .
க்ம்ா க் ஸ்ா = ஸ்ா , நி ஸ்ா , ப || பநிஸ்நிபம = கமபநிபமகஸ ||
சே. . . ல . ரா . ஜி . த . . . க . . . டிம் . . .
ஸாமோதம் ||
3

**சரணம்**

; பா ; = பா ; மா, க || கஸ்ா கமா = பா , ம பா ; ||
ஸ்யா ன ந்து . ர . ந . = க . ரி
3 3

; பா நிப = பநி ஸ்நி பா , ம || மகபமகஸ = ஸாகா மா ; ||
ஸோ . . பா . . ய . மா . . . ன . தே . ஹம்
4 3

; கம பம = க காஸ ; நிஸ || நிபா பநீ = ஸா கக ஸ்நிஸா ||
மௌ. . . னி , . நி . க . ர . சா . . ரு . .
; ஸ்நி ஸா = கா ; மா ; || பா , நிமா = பா ; பா ; ||
மா. . ன ஸா ப் ஜ ம . ரா ளம்
3

; பா பா = பா நீ நிபநி || ஸ்ா ஸ்நி = ஸ்ா ; ஸ்ா ; ||
க ன க . ரு . . ஞ நி . வா ஸம்
4

; ஸ் நி நீ = ஸ்க் ம்க் ஸ்ா ; || ஸ்ா கக ஸ்நி = ஸா ; ஸா ; ||
ப . ணி ரா . . . ஜ தல் . . ப . வா ஸம்
2

; ஸ்நி ஸ்ா = க்ம்ாக ஸ்ா ; || ஸ்நி ஸ்நி பா = பா நி நி பம பா ||
க . ன ஸ . . த்ரு ஸ . . . . பா . . ஸம் . .
4 3 4

கம பநி ஸ்க = நிஸ்ாநி பா , க || கம பநி ஸ்நி = பம கம பம கஸ ||
மா . . . ன . நீ . . ய . ம்ரு . து . . ஹா . . . . . ஸம்.
ஸாமோதம் ||
3

# மஹா பாரத ஸாரம்

பி.ஶ்ரீ.

28

## காண்டவ தகனம்

சுபத்ரா கல்யாணத்திற்குப் பின் கிருஷ்ண பகவானும் கொஞ்சகாலம் இந்திரப்பிரஸ்தத்திலே பாண்டவர்களுடன் தங்கினார். இச்சமயம் கண்ணனுக்கும் அர்ஜுனனுக்கு மிடையே நட்பு அதிகரித்தது. நட்புக்கு இலக்கியமாக ஹஸ்தினபுர வாசிகள் கர்ண துரியோதனர்களையும், இந்திரப்பிரஸ்த வாசிகளும் துவாரகை வாசிகளும் கிருஷ்ணார்ஜுனர்களையும் சுட்டிக் காட்டுவது வழக்கமாயிற்று.

### காண்டவ வனம்

கிருஷ்ணார்ஜுனர்கள் நகரத்தில் வெப்பம் அதிகமாயிருக்கிறதென்று யமுனைக் கரையிலுள்ள பூந்தோட்டங்களில் பொழுது போக்கப் போனார்கள். அந்தப் பிரதேசத்தை ஒட்டி ஒரே காடாய் அடர்ந்து கிடந்த காண்டவ வனத்தையும் கண்ணுற்றார்கள். அந்த வனத்திலே நரிகள், புலிகள், செந்நாய்கள், சிறுத்தைகள் முதலான பல மிருகங்களும், எத்தனையோ பாம்பு வகைகளும், மூங்கில், சந்தனம், சண்பகம், பனை, பலா முதலான பல தினுசு மரங்களும், புதர்களும் மண்டிக் கிடந்தன. சூரிய ஒளியும் பிரவேசிக்க முடியாமல் இருந்த அந்த வனத்தைத் துஷ்ட மிருகங்களும் க்ரூர மாமிச பக்ஷிணிகளான அரக்கர்களும் தங்குமிடமாகக் கொண்டிருந்தனர்.

'இத்தகைய வனத்தை அழிப்பது இந்த ராஜ்யத்துக்கே க்ஷேமம்' என்று எண்ணினார் கிருஷ்ணபகவான். ஆனால் தம் அபிப்பிராயத்தை அர்ஜுனனுக்குத் தெரிவிக்கவில்லை. தமது அபிப்பிராயத்தை மறைத்து வைத்துக்கொண்டு அர்ஜுனனை நோக்கி, 'நாம் நண்பர்களுடனும், உறவினர்களுடனும் ஆற்றங்கரையிலும் புனல் விளையாட்டுகளிலும் பொழுதுபோக்குவோம்' என்றார்

### பசித்தீ

அப்படியே அவர்களெல்லாம் பொழுது போக்கத் தொடங்கினார்கள். கிருஷ்ணனும் அர்ஜுனனும் மட்டும் தனியாக ஓரிடத்தில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது இவர்களை நோக்கி ஒரு பிராம்மணன் வந்தான். பனைமரம் போல் உயரமாக இருந்தான். தேக காந்தியோ உருக்கிவிட்ட தங்கம் போல் இருந்தது. தலை ரோமங்களும் தாடி மீசைகளும் செம்பட்ட ரோமமாக இருந்தன. கண்கள் நெருப்புக் கங்கு போல் ஜொலித்தன. 'ஐயோ பசிக்கிறதே!' என்று, கிடங்குவிழுந்ததுபோல் இருந்த வயிற்றைத் தொட்டுக் காட்டினான்.

உடனே அர்ஜுனன், "நாங்கள் தயார்செய்துகொண்டு வந்திருக்கும் சித்திரான்னங்களை உமக்கு அளிப்போம். ஐயரே! கவலைப்படவேண்டாம்" என்று வாக்களித்தான். அந்த ஐயரோ தமக்கு அன்னம் தேவையில்லை என்றும், தக்க ஆகாரம் வேண்டுமென்றும் தெரிவித்தார். 'அது என்ன?' என்று அர்ஜுனன் கேட்டதற்கு, அவர் காண்டவ வனத்தைச் சுட்டிக்காட்டினார். அர்ஜுனனுக்கோ ஒன்றும் புரியவில்லை.

அப்போது கண்ணன் அர்ஜுனனை நோக்கி, "அவருக்கு வேண்டிய அன்னபானாதிகள் எல்லாம் அந்த வனத்தில் இருக்கின்றன' என்றார். பிறகு "எப்படியாவது அவர் பசியைப் போக்குவதாக நீ வாக்களிக்க வேண்டும்" என்று அர்ஜுனனை வற்புறுத்தினார். அவன் வசீகரிக்கப்பட்டதுபோல் அவர் விரும்பியபடியே வாக்களித்து விட்டு, 'இனி என்ன செய்வது?' என்று ஒன்றும் தோன்றாமல்திகைத்து நின்றான்.

அப்பால் அந்தப் பிராம்மணனுடைய பெயர் என்ன என்று விசாரித்தார்கள். 'அக்கினி' என்றான் அவன். "உம் பசியை அக்னி என்று குறிப்பிடுகிறீரா?" என்று கேட்டான் அர்ஜுனன். அதற்குப் பிராம்மணன், "நானும் அக்கினி; என் பசியும் அக்கினிப் பசிதான்!" என்று பதில் சொன்னான்.

### உபவாசம்-பாரணை

தேவேந்திரன் அந்தவனத்தை ரக்ஷிப்பதாகவும், அஸ்திரங்களில் வல்லவராகிய கிருஷ்ணார்ஜுனர்கள் உதவிசெய்தால் தான் பசிதீரும் என்றும், 'அந்த நட்பை மறக்கமாட்டேன்' என்றும் பிராம்மணன் சொன்னான். "ஒரு பெரிய வேள்வியில் பன்னிரண்டு வருஷ காலம் நெய்யைக் குடித்து, ஹோமம் செய்த அன்னத்தையும் புசித்து விட்டதால் அக்கினியாகிய தனக்கும் அருசி ஏற்பட்டதாகவும்

அந்த அரோசகத்தைப் போக்குவதற்கு உபவாசம் கிடந்ததாகவும், அதனால் இப்போது பசி அதிகரித்திருப்பதாகவும், 'காண்டவ தகனம் உபவாசத்தை முறிப்பதற்குப் பாலும், பழ ரஸமும்போலிருக்கும்'! என்பதாகவும் அவன்தெரிவித்தான்.

அந்த அக்கினி பகவான் ஏற்கெனவே ஏழு முறை காண்டவ வனத்தை எரிக்க முயன்றவன். வாயுபகவானை நண்பனாகக் கொண்டு மிகுந்த வேகத்துடன் வனமெங்கும சஞ்சரிக்க முயன்றான்; கோபத்துடன் ஜொலித்துப் பார்த்தான். அந்த வனத்திலுள்ள பிராணிகள் பெரு முயற்சி செய்து நெருப்பை அவிக்க முயன்றன. ஆயிரக்கணக்கான யானைகள் துதிக்கைகளினால் தண்ணீரை எடுத்து அக்கினி மீது தாரையாகப் பொழிந்தன; வேறு பிராணிகளும் அந்த யானைகளுக்கு உதவி செய்தன. இந்திரனும் மழை பொழிந்து தீயை அவித்து விட்டான். இந்த வரலாற்றையும் அக்கினிபகவான்கிருஷ்ணார்ஜுனர்களிடம் தெரிவித்தான்.

அர்ஜுனன், இந்திரன் தன் தந்தை என்பதையும் எண்ணாமல் அவனையும் அடக்கி அக்கினிக்குக் காண்டவ வனத்தை விருந்திடுவதாகச் சொன்னான். உடனே அக்கினி அர்ஜுனனுக்குத் தேர், வில் முதலியவற்றையும் கண்ணனுக்குச் சக்கரம் முதலியவற்றையும் கொடுத்து உதவினான்.

யுத்த ஸந்நாகத்துடன் அர்ஜுனன் கவசம் தரித்து வில் பிடித்து ரதத்தில் ஏறிக்கொண்டான். அர்ஜுனனுக்கு அக்கினி கொடுத்த வில்லுக்குக் காண்டீபம் என்று பெயர். அந்த வில்லின் திறத்தால் அர்ஜுனனும் காண்டீபன் என்று பேர் பெற்றான்.

அக்கினி காண்டவ வனத்தை நாலு புறங்களிலும் சூழ்ந்து கொண்டு தன் ஏழு நாக்குகளையும் வெளியே நீட்டிப் பாரணை செய்யத்தொடங்கினான். கிருஷ்ணார்ஜுனர்கள் நெருப்பைக் கக்கும் பாணங்களைப் பிரயோகித்து உபவாசத்தை முறிக்க அக்கினிக்கு உதவி செய்து வந்தனர். பாணங்களால் கூட்டங் கூட்டமாக அடிக்கப்பட்ட துஷ்ட மிருகங்களும் விஷ ஸர்ப்பங்களும் நெருப்பினால் தகிக்கப்பட்டன. துஷ்ட ராட்சஸர்களும் கிருஷ்ணார்ஜுனர்களின் அஸ்திர சஸ்திரங்களால் நெருப்பிலே தள்ளப்பட்டனர்.

**இந்திரனோடு சண்டை**

தேவேந்திர கோபம் பெரிய பெரிய மேகங்களை ஏவிவிட்டது. அவை வானத்தை மறைத்து ஊழிக்காலமழைபோல பொழிந்தன. உடனே அர்ஜுனன் பாண வர்ஷத்தினால் மழையைத் தடுத்துக் காண்டவ வனத்தை மறைத்து விட்டான். இதனால் அக்கினிக்குக் கொண்டாட்டமாயிருந்தது.

அர்ஜுனனுக்கும், இந்திரனுக்கும் சண்டையே வந்து விட்டது. ஆனால் அந்தச்சண்டையில் தன் மகனான அர்ஜுனனுடைய அஸ்திரசஸ்திர சாமர்த்தியங்களைப் பெரிதும் மெச்சிய இந்திரன், கிருஷ்ணார்ஜுனர்களுடன் சமாதானம்செய்துகொண்டான்

காண்டவ வனம் ஒரே அக்கினிப் பிரளயமாகி விட்டது. அந்த வனத்திலுள்ள துஷ்டர்களும், துஷ்ட மிருகங்களும் தப்ப முடியவில்லை. மயன் என்னும் அசுரச் சிற்பி மட்டும் கிருஷ்ணார்ஜுனர்களைச் சரணாகதி செய்தான். அவன் துஷ்ட அசுர ராஜாக்களைச் சேர்ந்தவனாயினும், சிறந்த சிற்பத் தொழிலாளி என்று மன்னிக்கப் பெற்றான். கிருஷ்ணார்ஜுனர்களின் விருப்பத்திற்கிணங்க அக்கினி அவனைத் தகிக்க வில்லை.

காண்டவ வனம் பதினைந்து நாள் எரிந்துகொண்டிருந்தது. அந்தத் தகனத்திற்குப்பின் அக்கினி பகவானுக்குகிருஷ்ணார்ஜுனர்கள் விடைகொடுத்தனுப்பி வைத்தார்கள். அப்போதுமயன், கிருஷ்ணார்ஜுனர்களை நோக்கி, "உங்கள் உபகாரத்தை மறக்க மாட்டேன்" என்றான்.



# இரண்டாம் முறை





ஸர் க்ரிப்ஸ் முன்பாக தீவிரமான
திருக்கிறார் ராஷ்டிரபதி ஆஸாத்.
17-ந்தேதியன்று ஜனுப் அஸப் ஆலி
சந்தித்து பேசியபோது எடுத்தபடம்
மந்திரிகள் இந்தியத் தலைவர்களை வ
காரர் உள்ளே சென்று எடுத்த பட
முதன் முதலாக எடுத்ததாகும். ஜ
தடவை மந்திரிகளைக்கண்டு பேசியபே
வேவல் வரவேற்று கைகுலுக்குகிற
க்ரிப்ஸ், அலெக்ஸாண்டர் ஆகியோ
(இடது) சென்ற 18-ந்தேதியன்று
பெதிக் லாரன்ஸ் பிரபுவைப் பேட்டி
தார். பேச்சு முடிந்தவுடன் மகாத்
யனுப்பினர். இருவரும் மனம்விட்டுப்
அவர்கள் முகபாவம் உணர்த்துகிறது
காங்கிரஸ் காரியக் கமிட்டி மெம்பர்க
சமீபத்தில் விடுதலைபெற்ற ஸ்ரீமா
னும், அவரது மனைவியாரும் டில்லி
போது எடுத்த

## ற நடந்த சந்திப்பு





★

ாக திவிரமான ஆலோசனையுடன் உட்கார்ந்
பதி ஆஸாத். மௌலானு ஆஸாத் சென்ற
ப் அஸப் ஆலியுடன் மீண்டும் மந்திரிகளைச்
து எடுத்தபடம். (மேல் வலது) பிரிட்டிஷ்
தலைவர்களை வரவேற்றுப் பேசும்போது படக்
ு எடுத்த படத்தில் மேலே காண்பதுதான்
க்ததாகும். ஜனுப் ஜின்னு இரண்டாம்
ண்டு பேசியபோது அவரை வைஸ்ராய்
கைகுலுக்குகிருர். லாரன்ஸ் பிரபு, ஸர்
ாடர் ஆகியோரையும் படத்தில் காணலாம்.
-ந்தேதியன்று மகாத்மாஜி, இந்தியா மந்திரி
வைப் பேட்டிகண்டு மீண்டும் விவாதம் செய்
வுடன், மகாத்மாவை லாரன்ஸ் பிரபு வழி
மனம்விட்டுப்பேசியதில் உள்ள மகிழ்ச்சியை
ணர்த்துகிறது. (வலது) காந்திஜியையும்,
பிட்டி மெம்பர்களையும் கண்டு பேசிய பின்னர்
பெற்ற ஸ்ரீமான் ஜெயப்பிரகாச நாராயண
ியாரும் டில்லியிலிருந்து பாட்னு புறப்பட்ட
போது எடுத்த படம்.





# வளர்த்த வாஞ்சை

ஸ்ரீமதி பத்மாஸனி

அனல் வீசும் தாப ஜுரத்துடன் கண்களை மூடிய வண்ணம், கட்டிலில் படுத்து ஈனஸ்வரத்தில் முனகியபடி அப்படியும் இப்படியுமாகப் புரண்டு கொண்டிருந்த, தியாகு அஹல்யா........வென்று மெலிந்த குரலில் அழைத்தவுடன், மிகுந்த பதற்றத்துடன் அஹல்யா எழுந்துவந்து கட்டிலினருகில் சென்றாள். அவளுடைய மனது ஒரு நிலையில்லாமல் பற்பல விதமாக எண்ணி எண்ணித் தவித்தது. தன் அண்ணனுடைய நெற்றியில் கையை வைத்துப் பார்த்துவிட்டு, அப்பாடா, ஜுரம் என்னமாகக் காய்கிறது, என்று வாய்க்குள்ளாக முணுமுணுத்தவாறு அபாரமான திகிலுடன் மனம் வெதும்பினாள். ஜுரத்தின் வேகத்தைக் காட்டிலும், அஹல்யாவின் ஹிருதயம் பன்மடங்கு வேகமாய் அடித்துக் கொண்டிருந்தது.

அண்ணா! உடம்பை என்ன செய்கிறது? ஏதாவது கொஞ்சம் ஆகாரம் சாப்பிடுகிறாயா? என்று அன்பு ததும்பக் கூறினாள்.

ஒன்றும் வேண்டாம், டாக்டரை அழைக்கப் போன சந்துரு வந்து விட்டானா? என்று அரைக் கண்களைத் திறந்தவண்ணம் கவலை தோய்ந்த முகத்துடன் மெள்ளக் கேட்டார்.

வரும் நேரம்தான், எப்படியும் இன்னும் சிறிது நேரத்திற்குள் டாக்டருடன் சந்துரு வந்து விடுவார் நீங்கள் சரியானபடி ஆகாரம் சாப்பிடாமல் இப்படியிருந்தால் உடம்பு இன்னும் பலவீனமாய் விடுமே, கொஞ்சம் ஏதேனும் கரைத்துக்கொண்டு வருகிறேன், சாப்பிட்டுத்தான் ஆகவேண்டும் என்று கூறிவிட்டு உள்ளே சென்று ஹார்லிக்ஸை கரைத்துக்கொண்டு வந்து பலவந்தமாகக் கொஞ்சம் சாப்பிடச் செய்தாள்.

பக்கத்திலிருந்த நாற்காலியிலமர்ந்த அஹல்யா தன்னையே மறந்து, மிகுந்த சஞ்சலத்துடனும், மனக்குழப்பத்துடனும், தன் பிற்கால வாழ்க்கையைப்பற்றிய சிந்தனையில் மெய் மறந்திருந்தாள்.

ஹாரனின் சப்தம் வாயிற்பக்கம் கேட்கவேதான், அஹல்யா தன் சுய உணர்வையடைந்து, திடுக்கிட்டு எழுந்தாள். கலங்கியிருந்த கண்களிலிருந்து முத்துப்போல உருண்டோடி கன்னத்தில் விழுந்திருந்த கண்ணீரை மிக்க பரபரப்புடன் தன் புடவைத் தலைப்பினால் துடைத்துக்கொண்டாள். கறுத்துச் சுருண்டு முகத்தில் விழுந்திருந்த தன் கேசத்தைச் சரியாகக் கோதிவிட்டுக்கொண்டாள். சோர்வடைந்திருந்த தன் முகத்தில் சிறிது புன்முறுவலை பலவந்தமாக வரவழைத்துக்கொண்டு வாயிற்பக்கத்தில் தன் பார்வையைச் செலுத்தினாள்.

அடுத்த நிமிஷம், 'டக்டக்' என்று பூட்ஸின் ஓசையுடன் டாக்டர் வரவே, அஹல்யா அவரை வரவேற்றாள். பின்னால் வந்த சந்துருவுடன், டாக்டர் தியாகுவின் அருகில் செல்லவே அஹல்யாவும் பின் தொடர்ந்தாள்.

டாக்டரிடமிருந்து என்ன பதில் வருமோ! என்று மிகுந்த கலவரத்துடனும் ஏக்கம் நிறைந்த முகத்துடனும், அவர் பரிசோதனை செய்வதைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

இன்று ஜுரம் சற்றுக் கடுமையாகத்தான் இருக்கிறது. இருந்தாலும் கவலைப்படக்கூடிய நிலைமையிலில்லை என்று நினைக்கிறேன் என்று கூறிவிட்டு ஒரு இன்ஜெக்ஷன் கொடுத்துவிட்டு, வேறு மருந்துகளை மாற்றி எழுதிக் கொடுத்து அவைகளைக் கொடுக்க வேண்டிய முறைகளையும் கூறி, நான் வரவேண்டியது அவசியமென்று உங்களுக்கு எப்பொழுது தோன்றினாலும், உடனே சொல்லியனுப்பினால், நான் அவசியம் வருகிறேன், என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டார்.

அஹல்யா, நான் போய் மருந்துகளை வாங்கிக்கொண்டு, இன்னும் கொஞ்சம் ஐஸ்ஸும் வாங்கி வருகிறேன். நீ, இருக்கிற ஐஸைப் பையில் போட்டு நெற்றியில் வைத்துக் கொண்டிரு என்று சந்துரு கூறினான்.

அரைக் கண்களைத் திறந்தபடி தியாகு, சந்துரு! உன்னுடைய ஒத்தாசை இப்பொழுது எனக்குக் கொஞ்சம் வேண்டியிருக்கிறது நீ என் அருகில் இரு. அஹல்யாவைப் போய் அவைகளை வாங்கி வரச் சொல்லு என்று ஈனஸ்வரத்தில் கூறினான்.

உடனே அஹல்யா சென்றுவிடவே, சந்துரு ஐஸ்பாக்கைத் தியாகுவின் தலைமீது வைத்தபடி நாற்காலியின்மீது உட்கார்ந்துகொண்டிருந்தான்.

படுக்கையிலிருந்த தியாகு, சந்துருவை உற்று நோக்கியவாறு, நீண்ட பெருமூச்சு ஒன்றுவிட்டார். பிறகு சிறிது தயக்கத்துடன், சந்துரு!...என்று அழைத்தார்.

உடனே பரபரப்புடன் சந்துரு குனிந்து, என்ன வேண்டும், உடம்பை என்ன செய்கிறது என்று கனிவுடன் கேட்டான்.

"என் அஹல்யாவுக்காக நான் பிழைத்துக் கொள்வேனா" என்று கூறும்பொழுது நாத் தழுதழுத்து கண்களில் கண்ணீர் மல்கி உதட்டை மடக்கிக்கொண்டு பீறியெழுந்த துக்கத்தை அடக்க முயற்சித்தார்.

"அடாடா! இதென்ன அசட்டுக் கேள்வி? நீங்களா இப்படி அதைரியப்படுவது? கட்டாயம் பிழைத்துக் கொள்வீர்கள்! வீண் கவலை கொண்டு உடம்பை அலட்டிக் கொள்ள வேண்டாம்.

"என்னைப் பற்றிய வரையில், நான் சிறிதும் கவலைகொள்ளவில்லை. அஹல்யாவின் அனாதரவான நிலைமைக்காகவேதான், நான் கட்டாயம் பிழைத்தேயாக வேண்டும், ஆமாம்" என்று சற்று அழுத்தமாகக் கூறி மௌனத்திலாழ்ந்தார்.

அவருடைய மனது சொல்லொணாதவேதனையையும் குழப்பத்தையுமடைவதை, அவருடைய முகக் குறியிலிருந்து அறிந்துகொண்ட சந்துரு, அவர் நிலைமைக்கிரங்கி, "நீங்கள் அஹல்யாவைப்பற்றிச் சிறிதுகூடக் கவலைப்படவேண்டாம், அவளுக்காக நானும், என் தங்கை சுசீலாவும் எதையும் செய்யத் தயார். உண்மையாக எங்களை நம்பலாம் என்ற வார்த்தைகளைக் கேட்டவுடன், தியாகுவின் உள்ளத்தில் ஓர் நிம்மதி ஏற்பட்டதைப் போன்ற உணர்ச்சி, தோன்றியது. சந்துருவை, உற்று நோக்கிய வண்ணம் எதையோ கூறுவதற்கு வாயெடுத்தவர், பிறகு மனந்துணியாது சஞ்சலத்தில் ஆழ்ந்தார்.

அவரது கலக்கத்தையறிந்த சந்துரு, "உங்கள் மனதை அலைக்கழிக்கும் விஷயம் எத்தகையதாயினும் சரி, பயமின்றி என்னிடம் கூறலாம். உங்களுடைய ஆப்த நண்பனாக என்னைப் பாவிக்கலாம்" என்று இரக்கமாகவும், உறுதி கலந்த குரலிலும் கூறியதைக் கேட்ட, தியாகுவின் முகம் மலர்ந்து சற்றுக்களையையடைந்தது. ஆம், சந்துரு உன்னை நான் என் உயிருக்குயிரான நண்பனாகவேதான் பாவித்து வருகிறேன். உன் தங்கை சுசீலாவும், என் தங்கை அஹல்யாவும் கலாசாலைத் தோழிகளாக ஆரம்பித்துக் கடைசியில் உயிருக்குயிரான தோழிகளாகவும் ஆய்விட்டார்கள். அதைப்பற்றி எனக்கு ஒரு ஆறுதல்தான், ஆனால்......ஆனால்...... என் மனதைச் சில விஷயங்கள் பெரும்பாரமாக அழுத்திக்கொண்டிருக்கின்றன. அதைக் கூறுவிடில் என் ஹிருதயமே வெடித்துவிடும் போலத் தோன்றுகிறது என்று இரண்டு கைகளாலும் தன் மார்பை அழுத்திப் பிடித்துக்கொண்டார். முகத்தில் சோகத்தின் சாயை படர்ந்தது. கண்களை மூடியவண்ணம் நீண்ட பெருமூச்சு விட்டார்.

அது என் மாபெரும் கடமை. அதை நிறைவேற்றிவிட்டால்தான் என் ஆத்மாவுக்குச் சாந்தியுண்டு என்று வாய்க்குள்ளாகவே முணுமுணுத்துக்கொண்டார்.

தியாகுவின் போக்கு, சந்துருவுக்கு ஒன்றுமே விளங்காமல், பிரமை பிடித்ததைப் போன்று விழித்தான். பிறகு சற்று சமாளித்துக்கொண்டு; "என்னை இன்னமும் நீங்கள் நம்பவில்லையா? உங்கள் அஹல்யாவின் மீது நான் என்னுடைய உயிரையே வைத்திருப்பதை நீங்கள் அறிந்துகொள்ளவில்லையா? என்று உருக்கமாகக் கேட்டான்.

திடுக்கிட்டுக் கண்களைத் திறந்த தியாகு சந்துருவை உற்று நோக்கினார். கலங்கிய கண்களிலிருந்து வந்து மறைத்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டு மேலே பேச ஆரம்பித்தார் மெதுவான குரலில்.

அது ஒரு பெரிய கதை. உம், என்று பெருமூச்சுவிட்டார். எனக்குப் பத்து வயது ஆகும்வரையிலும் எங்காத்தில் வேறு குழந்தைகளே இல்லாதபடியினால், நான் மிக்க அருமையுடனும், செல்லமாகவும் வளர்ந்து வந்தேன். அதன் பிறகுதான் அஹல்யா பிறந்தாள். நாள் கழித்துப் பிறந்த அஹல்யாவின், சிரிப்பிற்கும், விளையாட்டிற்கும், குறுகுறுத்த முகத்திற்கும், எங்கள் எல்லோருடைய அன்பும் அவளுக்கே சொந்தமாயின. முக்கியமாக, என்னுடைய உயிரையும், பாசத்தையும் நான் அவளுக்கே அர்ப்பணம் செய்துவிட்டேன். அவளுடைய குழந்தை பருவத்தை நினைத்தாலே என் மனது பெருமிதமடைகிறது. சுருண்டு, சுருண்டு, கருவண்டுகளைப் போல் நெற்றியில் வந்து விழும் மயிருடனும், பால் வடியும் முகத்தில் மோகனச் சிரிப்புத் தவழ, அண்ணா! அண்ணா! வென்று அழைத்துக்கொண்டு ஓடி வரும்போது, அப்படியே வாரியணைத்து மார்போடு சார்த்திக்கொண்டு, எவ்வளவு நிமிஷங்கள் இருப்பேனோ தெரியாது, இவ்வுலகத்தையே மறந்துவிடுவேன்.

என் அப்பாவோ அம்மாவோ, அவளைச் சற்றுக் கடிந்துகொண்டால்கூடப் பொறுக்கமாட்டாள். பள்ளிக்கூடத்திலிருந்து வந்த, என்னைக் கண்டவுடன், அழுகையெல்லாம் பிரமாதமாகத் திரண்டெழுந்து ஓவென்றலறிக்கொண்டு ஓடி வருவாள். உடனே அவளைத் தூக்கி எடுத்துக்கொண்டு சமாதானம் செய்து அவர்களை வைதால்தான் என் மனமும் சாந்தியடையும். அதனால் அவர்கள் அஹல்யாவின் விஷயத்தில் தலையிட்டுக் கொள்ளவேமாட்டார்கள். உணவு உண்பதோ, உடை உடுத்துவதோ, குளிப்பதோ, சகலமும் நான்தான் அவளுக்கு. நான் எப்பொழுதாவது ஏதாவது அயர்வினால் சற்று ஒரு மாதிரியாக முகத்தை வைத்துக்கொண்டிருந்தால்கூட அவள் மனம் தாங்காது அடுத்த கணம் அஹல்யாவின் கண்களிலிருந்து முத்துப்போன்ற நீர் கன்னத்தின் வழியே உருண்டோடத் தயாராகக் காத்துக்கொண்டிருக்கும்.

அஹல்யாவின் மழலைப் பருவம் நீங்கி 5 வயது பிறந்தது. என் தகப்பனார் மட்டும் கொஞ்ச காலமாகவே, சற்றும் கலகலப்பும் சந்தோஷமின்றியும், ஏதோ பெருத்த கவலையுடனும், ஏக்கத்துடனும் காணப்பட்டார். யாருடனும் அதிகமாக முகம் கொடுத்தே பேசமாட்டார். சதா சிடு சிடுவென்றும் கடு கடுப்புமாகவே காணப்பட்டார். இதைப் பற்றி நானும், என் அம்மாவும் கேட்பதற்காக எவ்வளவோ தடவை நினைத்ததுண்டு. ஆனால் அவரிடத்தில் நேரில் கேட்க எங்கள் மனம் துணியவில்லை.

நாளுக்கு நாள் அப்பாவின் உடம்பு மெலிந்துபலவீனமடைந்து வருவதைக் கண்டு நாங்கள் நடு நடுங்கிப் போனோம். அப்பாவின் உள்ளத்தைத் துளைக்கும் விஷயம் என்னவென்று புரியாமல் நாங்கள் தவியாய்த் தவித்தோம். எவ்வளவோ மன்றாடிக்கேட்டும், சீறி விழுந்த பதிலைத்தவிர வேறு ஒன்றையும் அறிந்துகொள்ளமுடியாமல் நிலை கலங்கினோம்.

பிறகு அம்மாவே சற்றுத் தைரியம் கொண்டு அப்பாவிடத்தில் உடம்பை டாக்டரிடத்தில் காட்டும்படிக் கெஞ்சிக் கேட்கவே அதற்கு ஒருவாறு சம்மதித்தார். நான் உடனே போய் டாக்டரை அழைத்து வந்து காட்டினேன். பரிசோதனை செய்ததில் ரத்த ஓட்டம் அதிகமாயிருப்பதால், அதற்கு தகுந்த மருந்துகளையும், ஆகாரங்களையும் எழுதிக் கொடுத்து பலவீனமாக இருப்பதால், மிக்க ஜாக்கிரதையாகவும், அவர் மனது நிம்மதியாயிருக்கும்படியும் பார்த்துக்கொள்ள வேண்டுமென்றும் கூறிச் சென்றார்.

இதனாலெல்லாம் அப்பாவின் உடம்பு தேறவேயில்லை. மன நிம்மதியல்லவா வேண்டும்?

அவருக்கு அவ்வூரில் மிகுந்த செல்வாக்குமிருந்தது. அவர் நியாயப்படி வியாபாரத்தை நடத்தியதால் பெருத்த புகழும் பிரசித்தமான பெயருமிருந்தது. எங்களுக்கு யதேஷ்டமான சொத்துக்களும் உண்டு. இப்படிக் குழந்தைகளும் இருந்து செல்வமும் இருக்கும்போது, அப்பா மட்டும் ஏன் ஏதோ ஏக்கம் கொண்டவரைப் போலவே சிறிதும் கலகலப்புச் சந்தோஷமின்றியும் இருக்கிறாரே? என்று நானும், அம்மாவும் அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்போம்.

இவ்வாறு நாங்கள் கலங்கிய உள்ளத்துடன் எண்ணமிட்டுக்கொண்டிருக்கும்போது, ஒருநாள்

அப்பாவாகவே, என்னையும், அம்மாவையும் அழைத்துப் பக்கத்தில் உட்கார்ந்து கொள்ளும்படியாகக் கூறியது எங்களுக்கு முதலில் வெகு ஆச்சர்யமாகவே தான் தோன்றிற்று. நாங்களிருவரும் வந்து அமர்ந்து கொண்டவுடன், எங்களை மாறி மாறிப் பார்த்தார். பிறகு தொண்டையைக் கனைத்துக்கொண்டு, அஹல்யாவுக்குக் கூடிய சீக்கிரத்தில் விவாகம் செய்து விடலாமென்று நினைக்கிறேன், என்று எங்களைக் கூர்ந்து நோக்கியவாறு திடுதிப்பென்று, நாங்கள் சிறிதும் எதிர்பாராத விஷயத்தைக் கூறினர்.

அதைக் கேட்ட நாங்கள் பிரமித்துச் செயலற்றுப் போய் விட்டோம். "அவருக்கு ஏதோ புத்தி மாருட்டம்தான் ஏற்பட்டிருக்க வேண்டும், இல்லாவிடில் திடீரென்று 5 வயது நிறையாத பச்சைக்குழந்தைக்குக் கல்யாணம் என்று சொல்லுவாரா?" என்று நினைத்து நிலை கலங்கிப்போனேன்.

எங்கள் நிலைமையை உணர்ந்த அப்பா, "நீங்கள் திகைப்படைவீர்கள் என்பதை உணர்வேன், என் உடம்பின் கேவலமான நிலைமைக்காக நான் அப்படிக் கூறவில்லை, அதற்குத் தகுந்த காரணங்களும் இருக்கின்றன" என்று சொன்ன பிற்பாடுதான் அவர் சுய உணர்வுடன் பேசுகிருர் என்று சற்று மன அமைதி கொண்டோம்.

அப்பா பெருத்த யோசனையிலாழ்ந்திருந்தார். முகம் சோர்வடைந்திருந்தது; கண்கள் கலங்கி நீர் ததும்பியிருந்தது பிறகு எங்களைநோக்கி, சந்துரு! வெகு நாட்களாக என் மனதை அரித்துக் கொண்டிருந்த விஷயங்களைக் கூற இப்பொழுதுதான் தருணம் வந்திருக்கிறது என்று நோக்கினர்.

என் மனது தத்தளித்தது. அப்பா உங்கள் ஆவியை உரிஞ்சும் விஷயம் எப்படிப்பட்டதாயினும் சரி, பயப்படாமல் சொல்லுங்கள். எதையும் தைரியமாகச் சமாளித்துக் கொள்வேன். வீண் கவலையை விட்டுவிட்டு, உண்மையை உள்ளபடிக் கூறுங்கள் என்று தைரியமூட்டினேன் ஆனல் அந்தநிலைமையிலும்கூட, அஹல்யாவின் கல்யாணத்திற்கு மட்டும் சற்றும் சம்மதிக்கவே கூடாது. இதனல், எந்த பயங்கரமான நிலைமை ஏற்பட்டாலும் கூட அதைச் சமாளித்துக் கொள்ள வேண்டுமென்ற மனே உறுதி கொண்டேன்.

பிறகு அப்பா, துக்கம் தொண்டையை அடைக்க நாத்தடுமாற அவர் கூறிய வார்த்தைகள், எங்களிருவரையும் அப்படியே தூக்கி வாரிப் போட்டு விட்டது. ஒன்றும் பேசத் தோன்ருது, திகைத்து கல்லாய்ச் சமைந்து போய் விட்டோம்.

(தொடரும்)



இந்தியாவில் விமானப் படையின் பிரதம சேனபதியாக நியமிக்கப் பட்டிருக்கும் மார்ஷல் ஸர்ரோடரிக்

## நூதனமான தறி





துணிகளை நெய்யும் தறியில் நெசவாளி ஒரு கயிறைப் பிடித்து இழுப்பார். குறுக்கும் 'நெடுக்'குமாக 'டக் டக்' என்ற சப்தத்தோடு ஒரு கட்டை ஓடி வருகிறதல்லவா? அதன் பெயர் தான் "ஷட்டில்" இப்போது இந்த சப்தமோ, 'ஷட்டிலோ' இல்லாதபடி. ஒரு நெசவுத் தறி இங்கிலாந்தில் கண்டுபிடிக்கப்பட்டுளது. இதைச் சரிவர இயங்கச் செய்ய 6 வருஷ காலம் ஆயிற்ரும். மிஸ்டர் பாட்டெல்லி என்பவர் இதைக் கண்டுபிடித்தார். பிராட்போர்டு என்ற ஊரைச் சேர்ந்தவர். இந்த வேலையில் இவருக்கு உதவிய என்ஜினீயரின் பெயர் மிஸ்டர் ஸி பிளட்வொர்த். ஒரு நெசவாளரும் அவருடைய உதவியாளரும் 24 யந்திரங்களை ஓட்டலாம். எந்த 'மோஸ்த'ரில் வேண்டுமானுலும் இதில் நெசவு செய்யலாம். பருத்தி, பட்டு, கம்பிளி, முதலிய நூலாயினும் இதில் நெய்யலாம். வீட்டில் மின்சார சக்தி கிடைத்தால் பெண்மணிகளே வேண்டிய ஆடைகளை நெய்துவிட முடியும். இது வேலை செய்கையில் சப்தமே செய்வதில்லையாம். (1) மிஸ்டர் பாட்லி தமக்கு வெளி நாடுகளிலிருந்து இந்த யந்திரம்பற்றி விசாரித்து வந்த காகிதங்களைப் பைசல் செய்து கொண்டு மேஜை முன் உட்கார்ந்திருக்கிருர். (2) படத்தில் யந்திரத்தைக் கண்டு பிடித்த மிஸ்டர் பாட்லியையும், மிஸ்டர் பிளட்வொர்த்தையும் காணலாம்.

# தங்கமும் மாணிக்கமும்

— ஸ்ரீமதி ரங்கநாயகி —

வைரவன் செட்டியார்பொள்ளாச்சியில் ஒரு பெரிய நகை வியாபாரி. வியாபார விஷயமாய் அவருக்குப் பட்டணம் போகவேண்டியிருந்தது. அவர் பங்களா முன்னால் அவரை ரயில்வே ஸ்டேஷனுக்குஅழைத்துச்செல்ல ஒரு ஜட்கா வண்டி தயாராயிருந்தது. வண்டி ஏறும்பொழுது, தன் மனைவியைக் கூப்பிட்டு "மரகதம், நான் திரும்பி வர இன்னும் 3 நாள் பிடிக்கும் பங்களா "கேட்டு" பூட்டிவை. வீட்டுக்கதவை சும்மா திறந்து வைக்காதே. தங்கத்தையும், மாணிக்கத்தையும் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள். காலம், தேசம் ரொம்ப கெட்டுக்கிடக்குது" என்று சொல்லிவிட்டு வண்டியில் ஏறினர்.

ஜட்கா வண்டி வீரப்பன் இதை கேட்டுக்கொண்டிருந்தான். அவனுக்குக் காலையில் குருவி ஜோதிஷன் ஒருவன் நல்ல அதிர்ஷ்டம் கூடியசீக்கிரம் வரும் என்று சொல்லி இருந்தான். அதை நினைத்துக்



கொண்டு சக்கரத்தில் சாட்டைக் கோல் கொடுத்து "கட கட கட" என்று சத்தம் செய்து, வாயு வேகத்தில் ஓட்டி விட்டான் குதிரையை.

ஸ்டேஷன் வந்ததும் செட்டியார் 8 அணு வாடகை கொடுத்தார். வீரப்பன் ஒரு ரூபாய்க்கு குறைந்தவாடகை வாங்கி எவ்வளவோ காலம் ஆயிற்று. செட்டியார் வீட்டுத் தங்கமும், மாணிக்கமும் இன்னும் சில மணி நேரத்தில் தன் வீட்டுக்கு வரும்பொழுது எட்டு அணு காசுக்குப் பேரம் பேசுவானேன் என்று நேரத்தைக் கழிக்காமல் வீடு திரும்பினன்.

குதிரைக்கு கொள் வைத்து அதை அன்புடன் தடவிக் கொடுத்து "டேய் ஹைபப்பிரீயன்," உனக்கு இனிமேல் சுக்கிரதசைதான்; வைரவன் செட்டியார் மாணிக்கமும் தங்கமும் இன்னும் சில மணிக்குள் என் வீட்டை அலங்கரிக்கும். அப்போ உனக்கு தினம் இரண்டு படி கொள்ளும் ஒரு கட்டு பச்சைப்புல்லும் கிடைப்பது நிச்சயம். அத்துடன் உனக்கு கொஞ்ச நாள் ரஜாவும் கிடைக்கும்" என்று சொல்லி பீடியை வாயில் வைத்து, தீப்பெட்டியை பற்ற வைத்தான்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த பக்கத்து வீட்டு மாரியப்பன், "அண்ணே, அப்படியா சங்கதி! சரி நீ போய் தங்கமும் மாணிக்கமும் கொண்டு வா. உன் சுக்கிர தசை என் திசையில் திரும்ப அதிக நேரம் ஆகாது. காலையில் ரேகை சாஸ்திர ஜோதிஷன் எனக்கு யோகம் கை மேல் காத்துக் கொண்டிருக்குது என்று சொன்னன். ஒரு நாளும் ரேகை சாஸ்திரம் பொய்க்காது" என்று நினைத்துக்கொண்டு வீரப்பனை வேவு பார்க்க கிளம்பினன். மடியில் பீச்சுவா கெட்டுப் போகாமல் இருக்கிறதா என்று தொட்டுப் பார்த்துக்கொண்டான்.

வீரப்பன் ராத்திரி ஒரு மணிக்கு செட்டியார் பங்களாவுக்குப் போய், ஒரு சுவரில் கன்னம் வைத்து, வீட்டுக்குள் நுழைந்தான். "டார்ச் லைட்" போட்டு எல்லா அறைகளையும் பார்த்தான். எங்கும் இரும்புப் பெட்டி காணவில்லை. சாதாரணமான டிரங்குகளும், மரப் பெட்டியும் கூட அங்கில்லை. சுவரில் இருக்கும் அல்மாரியைத் திறந்து பார்த்தான். சில கைத்தறி வேஷ்டிகளும்,



புடவைகளும் இருந்தன. மில் வேஷ்டிகூட இல்லை! உடனே அவன் முகம் சற்றுவாடியது. கோபமும் வந்தது. முகமுடியை அணிந்துகொண்டு

மரகதம் படுக்கைக்கு சமீபத்தில் போனான்.

அவள் தன் இரண்டு குழந்தைகளுடன் தூங்கிக்கொண்டிருந்தாள். வீரப்பன் உற்றுப் பார்த்தான். அவள் கழுத்தில் அழுக்குப்பிடித்த நூல் சரடில் ஒரு தாலியும், கைகளில் இரண்டு ரப்பர் வளையல்களும்தான் இருந்தன. குழந்தைகள்மேல் ஒரு ஷர்ட்டைத் தவிர மற்றப்படி அவர்கள் பிறக்கும் பொழுது எப்படி இருந்தார்களோ அப்படியே இருந்தார்கள். வீரப்பனுக்கு ஏமாற்றத்தால் துக்கம் வந்துவிட்டது. பல்லைக் கடித்துக் கொண்டு கத்தியை எடுத்து உருவினான்.

"ஏய் மரகதம்" என்று கத்தினான்.

திடுக்கிட்டு எழுந்த மரகதம் தன் முன்னால் ஒருவன் முகமூடி அணிந்து, கத்தியுடன் நிற்பதைக்கண்டாள். அவள் சப்த நாடியும் ஒடுங்கிவிட்டது. நா எழவில்லை. "ஐயோ, மாணிக்கம் தங்கம்" என்று விழித்துப் பார்த்தாள்.

"ஏய், இந்த வீட்டில் தங்கமும், மாணிக்கமும் எங்கே இருக்கிறது? சீக்கிரம் சத்தம் போடாமல் சொல். இல்லாவிட்டால் இந்தக்கத்தி உன் ரத்தத்தை ருசி பார்த்துவிடும்" என்று மிரட்டினான் வீரப்பன்.

"அப்பா இந்த வீட்டில் மருந்துக்குக்கூட தங்கமும், மாணிக்கமும் கிடையாது. என் கணவர் என்னமோ ஒரு பெரிய நகை வியாபாரிதான். தங்கத்தின் விலை விஷம்போல் ஏறியது. உடனே அவர் என் மேலிருந்த நகை நட்டு எல்லாவற்றையும் விற்று இந்தப்பங்களாவும்கொஞ்சம் பூமியும் வாங்கிவிட்டார். இப்பொழுது இந்த வீட்டில் "தங்கம்" என்ற ஒரு பெண் குழந்தையும், 'மாணிக்கம்' என்ற ஒரு ஆண் குழந்தையும்தான் இருக்கிறார்கள்" என்று நிதானமாய்ச் சொன்னாள்.



வீரப்பனுக்கு தலையில் இடி விழுந்ததுபோலிருந்தது. தனக்கு சுக்கிர தசை போய் சனி தசை வந்துவிட்டதாக நினைத்தான், வண்டி வாடகையும் சரியாக கொடுக்காமல் தன்னை இப்படி ஏமாற்றின செட்டியாரை நினைக்கும்பொழுது, அவன் மீசை துடித்தது.

திரும்பிச் சென்று பங்களா சுவரைத் தாவிக் குதித்தான். அங்கே இவன் வரவைக் காத்து ஒளிந்துகொண்டிருந்த மாரியப்பன், "டேய் வண்டிக்காரா உன் குதிரைக்கு இரண்டு படி கொள்ளும்; ஒரு கட்டு பச்சைப் புல்லும் தான் வேண்டும்; தங்கமும், மாணிக்கமும் வேண்டாம். அதை இங்கே வைத்துவிட்டு போ, அப்பனே" என்றான்.

வீரப்பன் மூக்கின் நுனிமேல் காத்துக்கொண்டிருந்த கோபம், அவன் கையில் இருந்த கத்திக்கு ஓடி அது மாரியப்பன் மார்புக்குள் பாய்ந்தது.

"டேய், உன் கத்தியைவிட என் பீச்சுவா அதிக நீளம் என்று நீ ஒத்துக் கொள்வாய்" என்று மாரியப்பன் சொல்லும்பொழுதே அவன் பீச்சுவா வீரப்பன் வயிற்றில் இருப்பதை ருசி பார்த்து விட்டது.

சிறிது தூரத்தில் இதைக் கவனித்த போலீஸ்காரர்கள் 704ம், 304ம் ஓடி வந்தார்கள்.

டே 304, நீ அவனை ஒரு கை பார்த்துக்கோ, நான் இவனைக் கவனிச்சுக்றேன். வாங்கப்பா வாங்க, நீங்க மறுபடியும் ஜெயிலிலிருந்து வந்து காந்தி ராஜ்யத்தைப் பார்ப்பீங்களோ, என்னமோ எனக்குத் தெரியாது. ஆனால் எனக்கும் 704க்கும் அடுத்த மாசம் "ஏடு" வேலை கிடைப்பது நிச்சயம் என்று சொல்லி இருவரையும் போலீஸ் ஸ்டேஷனுக்கு இழுத்துச்சென்றார்கள்

வீரப்பன் "லாக்கப்"பில் நுழையும்பொழுது அவன் குதிரை கனைத்த சப்தம் கேட்டது.

---

# ஜுர ஆஸ்பத்திரி.



ஜுர வகைகளை நிர்ணயித்து அவற்றிற்கான சிகிச்சைகளைச் செய்ய இங்கிலாந்தில் இப்போது பிரபலமான ஆஸ்பத்திரியொன்று ஏற்பட்டு நடக்கிறது. அங்குள்ள நர்ஸ்களைப் படத்தில் காணலாம். நர்ஸ்களுக்கு வேண்டிய பாட போதனையை நடத்துகிறார் ஒரு சகோதரி.



★

மேற்படி ஆஸ்பத்திரியில் ரேடியோலஜி இலாகாவில் நடு குழந்தையை "எக்ஸ்ரே" படமெடுத்து அக்குழந்தையின் ஜுர வகையைக் கண்டு பிடித்த போது எடுத்த படம்.

★



தஞ்சை கூட்டுறவு ஸெண்டிரல் பாங்கியின் வெள்ளி விழா சமீபத்தில் கொண்டாடப்பட்டபோது எடுத்த படம். டாக்டர் சுப்பராயன் தலைமை வகித்தார். ஸ்ரீமான் ஜெ. ஸி. குமரப்பா வெள்ளி விழாப் பிரசங்கத்தைச் செய்தார்.



★

பிரிட்டிஷ் பிரதம மந்திரி மிஸ்டர் அட்லியின் இரண்டாவது பெண்ணான பெலிஸிடி அட்லி நர்ஸ் தொழிலில் விசேஷப் பயிற்சிபெறுகிறார். காலை 9-முதல் இரவு 7-வரை அவர் சிசுக்களைக் கவனிக்கிறார். படத்தில் அவர் குழந்தைகளைப்பராமரித்துக்கொண் டிருப்பதைக் காண்க.

★

உலகில் தற்சமயம் முதன்மை ஸ்தானத்தை வகிக்கும் அமெரிக்காவில் முக்கியப் பட்டணமான நியூயார்க்கைதான் இப்படங்கள் சித்தரிக்கின்றன.

(இடது)

நியூயார்க்கில் இறங்கியவுடனேயே ஒருவரின் கண்ணைக் கவருபவை அந்நகரின் வானளாவிய கட்டிடங்கள்தாம். அதற்கு முக்கிய உதாரணமாக இருப்பது தான்வானத்தைத்தாங்கி நிற்பதுபோல் தோற்றமளிக்கும் எம்பயர் ஸ்டேட் கட்டிடம் இதுதான் உலகத்திலேயே உயர்ந்த கட்டிடமாகும்,

(கீழ்)

நியூயார்க்கில் வப்போர் தொகை 75 லக்ஷமாகும். அவர்களுக்குத் தினசரி போக்குவரத்து வசதியை அளிக்கும் ரயில்களின் எண்ணிக்கையைப் படத்திலின்று ஒருவாறு ஊகிக்கலாம். நியூயார்க்தான் நாற்புறம் இருந்துவரும் ரயில்கள் சேருமிடமாகும்.







வானத்தைத் தாங்கி நிற்பது இரவில் பார்ப்பவர்களுக்குத் தெரியாமல் போய்விடுமோ என்ற ஐயத்தை தவிர்க்கும் வகையில் கட்டிடம் ஜகஜ்ஜோதியாய் தீபங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகிறது (வலது) நியூயார்க்கின் ஹிருதயம் போன்றதும், நகரை இரண்டாகப் பிரிப்பதுமான 42-வது தெருவாகும். முக்கியக் கடைகள் அனைத்தும் இங்குதான் உள்ளன—(கீழ்) இதுதான் நியூயார்க்கின் தோற்றம், வானத்தினின்று பார்க்கும்போது படத்தின் முன் பாகத்தில் இருப்பவைதான் துறைமுக நிலையங்களாகும்.

# "யாருக்கும் தோழன்"



( ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி )



தந்தையாரைப்பற்றி அறிந்தவர்கள் அவர் சகாக்களையும் சற்று தெரிந்துகொள்வது அவசியம் என்று நினைக்கிறேன். ஸ்ரீ வ. ரா., நாகசாமி இவர்களைப் போன்ற இளைஞர்கள் எப்போதும் தந்தையாருடன் இருப்பார்கள். தற்காலத்தில் "பாரதி தாசன்" என்று புகழ்படும் கனகசுப்புரத்னம் விகடமாகப் பேசுவார். முன்னேற்றத்தில் ஆர்வம் கொண்ட நா. சுப்பிரமணிய அய்யர், சங்கீத சிகாமணி சாமிநாதய்யர், (மேற்படியார் தம்பி) அன்புப் பணி செய்யும் அம்மாக்கண்ணுவிலிருந்து ஆத்ம விசாரணை செய்யும் அரவிந்தர் வரை எல்லாரும தந்தையாரின் தோழர்தம். மிளகாய் பழச்சாமி (இவர் சந்யாஸி) குள்ளச்சாமி, கோவிந்தசாமி, கடோற்கசன், முத்து கிருஷ்ணன், இவர்களைத் தவிர கடித மூலமாகப் பேசும் நண்பர்கள் பலர். அறிஞர் வ. உ. சிதம்பரம் பிள்ளை, ஆங்கில அறிஞர் கஸின்ஸ், அனிபெஸண்ட், மகாமகோபாத்யாய உ. வே. சாமிநாதய்யர் அவர்கள். சோமசுந்தர பாரதியார், பிரதம மந்திரி மாக்டனல்ட் முதலியவர்கள் குறிப்பிடக்கூடியவர்கள். எதனால் இந்த நண்பர்களைப்பற்றிய ஞாபகம் ஏற்பட்டதன்றால், புதிய நண்பர் ஒருவர் என்னிடம் வந்து பின் வரும் கேள்விகளைக் கேட்டார்:—

"ராஜாஜி புதுவைக்கு வந்து உங்கள் வீட்டில் விருந்துண்டதாக சென்ற வருஷம் எட்டயபுரத்தில் பாரதி ஞாபகார்த்த அஸ்திவார விழாவன்று பேசினாரே, பாரதி உணவில்லாமல் அநேக நாட்கள் பட்டினியிருந்தார் என்று கேள்விப்பட்டிருக்கிறேனே, ராஜாஜி சொல்லிய விஷயம் வாஸ்தவமான செய்திதானா?" மற்றும் பாரதி சந்திரனைப்போல் இருந்தார் என்றார். நாங்கள் பாரதியென்றால் வறுமையால் வாடி மெலிந்த எலும்புக்கூடு போன்ற உருவம் என்று எண்ணியிருந்தோம். தற்போது பத்திரிகையில் காணப்படும் திருவுருவப்படமும் எங்கள் அபிப்ராயத்தையே ஊர்ஜிதப்படுத்துகிறது என்றார். நான் நண்பரே, தந்தையாரைப் பார்ப்பதற்கென சென்னையிலிருந்தும், வெளியூர்களிலிருந்தும் நண்பர்கள் திரள் திரளாக வருவார்கள். எனக்கு அப்போது சிறு வயது. ராஜாஜியும் வந்து விருந்துண்டிருக்கலாம். எங்கள் வீட்டில் எப்போதுமே வறுமைத் தாண்டவம் நடமாடாது. தந்தையார் பிராமண தருமத்தை உள்ளபடி அநுஷ்டித்து வந்தபடியால் சில சமயம் அரிசித் தட்டு ஏற்படும். ஆனால், என் தாயாரின் முழு உழைப்பினால் அந்த சிரமங்களைச் சமாளித்துக் கொள்வோம். ராஜாஜி அவரைச் "சந்திரன்" என்று கூறியது மிகவும் உண்மை. இளமைப் பருவத்தில் சாமுத்திரிகா லக்ஷணத்தில் வகுத்திருக்கும் வண்ணம அமைந்திருந்தது அவர் உருவம். கொடிய கஷ்டங்களினால் பின்னர், அவர் சரீரம் இளைத்துக் கறுத்தது. அதனால்தான் தாம் கூறுவது போல் தற்சமயம் போட்டோக்களில், நைந்த உருவம் பார்க்கிறோம்" என்றேன். நண்பர் சென்றார். நானும் தந்தையார் நண்பர்களைப்பற்றி எண்ணமிடலானேன். எல்லோரும் தந்தையாரிடம் அளவற்ற அன்பு பூண்டவர்கள். ஒரு சமயம் ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் தந்தையாரைப் பலமாகக் கண்டித்திருந்தார். ஒரு கடிதத்தில், விஷயம் வேறொன்றுமில்லை. "நவதந்திரக் கதையில் மனிதர்களைக் கதையில் புகுத்துவதை விட்டுவிட்டு, மிருகங்களைப் புகுத்தியிருக்கிறாயே. இது நன்றாயிருக்கிறதா? ஹாஸ்யமும் வரை கடந்தால் உதவாது. நீ இவ்விதம் மென் மேலும் எழுதி வந்தால் தமிழ் நாட்டாரின் மதிப்பை இழப்பதோடு, பரிகாசத்திற்கும இடமாவாய்" என்ற தோரணையில் இருந்தது அக்கடிதம். எங்களுக்கெல்லாம் அந்தக் கடிதம் மிகுந்த வருத்தத்தைக் கொடுத்தது. தந்தையார் "ஞான ரதம்" எழுதியவுடன் "மண்ணுலகம்" ஒன்றுக்கு இணை உலகத்திலேயே கிடையாது என்றெல்லாம் எழுதி உற்சாகமளித்த அன்பர் இப்படி எழுதியிருக்கிறாரே என்று. தந்தையாரோ மற்றவர்களுக்காகக் கொள்கையை விடமாட்டார்.

"ஆருயிர் நண்ப,

நலங்கூறி இடித்துரைக்கும் உங்கள் வார்த்தைகள் என் காதில் தேன் போல் பாய்ந்துவிட்டன. இத்துணை அறிவாளியான தங்களுக்கு மிருகங்களின் மேல் ஏன் இத்துணை பகைமை? அவைகளும் நம்மைப் போல் காரியாம்சத்தில் இறங்கிவிட்டால் நமது ஜனங்கள் அவைகளுக்கும் பின்னால் தங்கிவிடுவார்களோ என்ற வருத்தத்தினாலேயே இவ்வண்ணம் எழுதியிருக்கிறீர்கள் போலும்!"

என்றவாறு பதில் எழுதினார். அதற்கு ஸ்ரீ பிள்ளையவர்கள்

"அன்புள்ள மாமா,

உன் கலைச் சுவையை அறிந்துகொள்ளாமல் எழுதினேன், மன்னிக்கவும்" என்று எழுதினார். பாரதியாரை அனைவரும் போற்றுகிறார்கள். தமிழ் நாட்டில் எத்தனையோ அபிப்ராய பேதங்கள் தோன்றி மறைந்துவிட்டன. ஆனால், பாரதியை மட்டும் எல்லோரும் ஒன்றுபோல் அன்பு செலுத்துகிறார்கள்.

# நீலப் புடவை

## ஆர். கோபால்

கமலா கணவனுடன் கடைத் தெருவுக்குப் போய், தனக்குப் பிடித்தமான நீலநிறப்புடவையை வாங்கி வந்ததுதான் தாமதம். புடவை சாதாரணமானதுதான். ஆனால், அதில் செய்திருந்த நூதன வேலைப்பாட்டையும், அதைக் கமலா உடுத்தியதால் அவள் இயற்கையழகைப் பன் மடங்கு பலப்படுத்தியதும் அக்கம்பக்கத்திலுள்ள அவள் தோழிகளின் மனத்தில் ஓர் கிளர்ச்சியை உண்டுபண்ணியது ஆச்சரியமல்ல.

கமலா எல்லாவிதத்திலும் பாக்கியவதியென்று அவள் பெற்றோர் புகழ்ந்தனர். அவர்கள் கடைசிப் பையன் குப்பு அடிக்கடி "கமலீ! உனக்கென்னடீ? நீலப் புடவையைக் கட்டிக்கொண்டு ஜோராய்க் கிளம்பி விடுகிறாய்" என்று சொல்ல ஆரம்பித்துவிட்டான். கமலியின் கண்களிலிருந்து கண்ணீர் "கரகர" வென்று ஓட ஆரம்பித்துவிடும். அவள் பதில் பேசாமல் உள்ளே போய்விடுவாள். சுந்தரமய்யர் பெண்கள் எல்லாரிலும் கமலாவே புத்தியுள்ளவள் என்றும், புருஷன் மனங் கோணாமல் நடக்கும் தன்மை வாய்ந்தவள் என்றும், அதிர்ஷ்டக்காரி யென்றும் எல்லோரும் புகழ்ந்தார்கள். சுந்தரமய்யர் ஓர் சாதாரண கிராம உத்தியோகஸ்தராயினும், நெறி தவறாது, கண்ணியமாகக் குடும்பத்தை நடத்தி வந்தார். அவ்விதம் மங்களகரமான வாழ்க்கைக்குச் சாதனமாயிருந்தவள் பொறுமையும், புருஷன் மனங் கோணாது நடக்கும் தன்மையும் வாய்ந்த அவர் மனைவி விசாலத்தம்மாள் தான் என்பதை ஊரார் அடிக்கடி மெச்சிப் பேசினார்கள். கமலாவும் கல்வியறிவுள்ள பெண். குடும்பத்திற்கேற்ற குணவதி. தெய்வ பக்தியும், சாந்த குணமும் நிறைந்தவள். ஆனால், அவளுக்கு நீல நிறத்தைக் கண்டால் ஒரு பிரேமை. அவள் கட்டழகியாயிருந்தும் அவளுக்கு வாழ்க்கைத் துணைவனாய் வாய்த்த துரைசாமி சற்று கறுத்த மேனியையுடையவன். யாராவது விளையாட்டுக்காகவாவது "கமலீ! உன் ஆம்படையான் கும்பிருட்டுடி! கறுப்புடீ" என்று சொல்லிவிடுவார்கள். உடனே அவளுக்கு வந்துவிடும் கோபம். துக்கம் தொண்டையை அடைத்துக்கொள்ளும். "உங்களுக்கென்ன ஆக வேண்டியது? எனக்கு எப்படியிருந்தாலும் தேவலை. பகவானாகப் பார்த்து ஒரு பெண்ணுக்கென்று கொடுத்த பெரும் பாக்கியத்தை வணங்கித் தெய்வமாய்க் கருதி மனங் கோணாமல் நடந்தால்தான் எல்லாவித நன்மையும் ஏற்படும். உங்கள் வேலையைப் பார்த்துக்கொண்டு போங்கள்" என்று அறைந்து கூறிவிடுவாள்.

அவர்கள் வீட்டிற்கு ஒரு நாள் ஓர் கிழவர் விருந்தினராய் வந்தார். அவர்தான் கூட இருந்து அந்த நீலப் புடவையைப் பொறுக்கியெடுத்து வாங்கித் தந்தவர். பெரிய தனவந்தரும், தயாள குணம் நிறைந்தவரும், சிறுமிகளைக் கண்டால் சதா கேலி செய்பவருமான அவர், கமலாவைக் கூப்பிட்டு, சற்று கேலியாயும் கடுமையாயும் "அம்மா! பொண்ணு! நீ ரொம்ப சமத்து! நன்னாயிருக்கணம்! அந்த நீலப் புடவையால் தான் உன் கஷ்டம் தீரும். ஆனால், நீல வர்ண ஆசையை விடவேண்டும்" என்று சொன்னார்.

அது நடந்து நாட்கள் பல சென்றாலும், கள்ளங் கபடற்ற கமலாவின் உள்ளத்தில் அவர் சொன்ன விஷயம் "சரே லெ"ன்று தைத்தது. அவள் மனதை எப்படித் திருப்தியடையச் செய்தாலும் மனம் வேறாயிருந்தது. பெற்றோர் அவள் இஷ்டப்பட்டதையே வாங்கிக் கொடுத்துவிடுவார்கள். மோதிரமானால் நீலக்கல், ஜாக்கெட்டானால் நீல பார்டர், வளையானால் நீல வளைகள்தான்! அவளுக்கு எல்லாவற்றையும்விட நீலக் கலர்தான் நன்மையையும், நிம்மதியையுமளித்தது.

மணக்கோலத்துடன் காட்சியளித்தபோதும் எல்லாம் அதே வர்ணம்தான்.

கணவனுடன் ரொம்ப ஒத்துமையென்று எல்லாரும் பேசிக் கொள்ள ஆரம்பித்தனர். ஒருவராவது கமலாவைக் கண்டிப்பது கிடையாது. துஷ்டையாயிருந்தாலல்லவோ?

கணவன், படித்த பட்டதாரியாயினும் வேலை கிடைக்கவில்லை. ஆனால், சற்று பூஸ்திதியிருந்ததால் அவ்வூரிலேயே அடுத்த தெருவில் தன் சொந்தக் குடும்பத்தை நடத்த ஆரம்பித்தான். புருஷன் என்ன சொன்னாலும், எது செய்தாலும் பதில் பேசாது பொறுமையாயும் ஒற்றுமையாயும் குடும்ப பாரத்தை வகிக்க ஆரம்பித்தாள் கமலா. புருஷன் சந்தோஷமாயிருந்தால்தான் தனக்கு நன்மை ஏற்படும் என்று அடிக்கடி சொல்லிக்கொள்வாள். பெண்ணாய் பிறந்தவர்களுக்குப் புருஷன்தான் கண்கண்ட தெய்வமென்றும், அவள் தாயார் அவளைக் கொண்டு வந்த வகையிலிருந்தும், கணவனுக்கு ஏற்ற குணவதியென்ற நற்பெயரையெடுத்தாள். துரைசாமி கோபித்துக்கொண்டால்கூட முகம்சுணங்கி எதிர்த்துப் பேசமாட்டாள். இந்தப் பெரிய நற்குணமே அவளைக் காக்கும் தெய்வமாயிருந்தது. வீடும் மங்களகரமாயிற்று. நிலம் அதிகமில்லாவிட்டாலும் அவ்வருஷம் விளைச்சல் இருமடங்காயிற்று. துர்க்குண துஷ்ட தேவதைகள் அவள் வீட்டை விட்டு ஓட ஆரம்பித்தன. புருஷனும் மனைவியும் ஒற்றுமையாயிருப்பதைப்பற்றி அத்தெருவிலுள்ள பெரியவர்கள் மெச்சிக் கொண்டார்கள். சதா சண்டை போடும் சுபாவமுள்ள சிறுமிகள் பலர் சஞ்சலமடைந்தார்கள். கமலாவைப் பார்த்துப் பொறாமையுமடைந்தார்கள். பிறந்தகத்திலிருந்து யார் வந்து அழைத்தாலும் போகமாட்டாள்.

காலச் சக்கரம் சுழலவாரம்பித்தது. பெரு மழை, வெள்ளம், கள்வர் பயம், கணவனுக்குக் கஷ்டம், இவற்றிலிருந்துதான் கமலாவின் கஷ்ட காலம் ஆரம்பித்தது. பொறுமையை மாத்திரம் இழக்கக்கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டாள். அவள் பிறந்தகத்திலிருந்து தாயாரே வந்து கூப்பிட்டும் "அவரைவிட்டு இந்த சமயத்தில் அரை நாழி நான் வரமாட்டேன் போ" என்று சொல்லிவிட்டாள். சில தினங்

களில் எல்லாம் போய்விட்டது. அவர்கள் வீடு ஒன்றுதான் பாக்கி. "இவ்வளவு கஷ்டத்தில் எனக்கு இவ்வளவு விலை உசந்த புடவை எதுக்கு? மட்டப்புடவை நிரம்பயிருக்கு, வந்த விலைக்கு இதை வித்துடலாமே" யென்று ஒரு நாள் புடவையை மடிப்போடு கணவன் கையில் எடுத்துக் கொடுத்தாள். அவள் அதை ஒரு நாளாவது சரியாக உடுத்திக் கொள்ளவில்லை. மடிப்புக் கலையாதபடி அப்படியேயிருந்தது. துரைசாமி சிரித்துக் கொண்டே, அதை வாங்கிப் பெட்டிக்குள் வைத்துவிட்டான். நாட்கள் பல சென்றன. கஷ்டங்கள் அதிகரித்தன. தன் தகப்பனார் உதவி செய்ய முன் வந்தாலும், "எங்களுக்கு ஒண்ணும் கஷ்டமில்லையப்பா! நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? எங்களுக்கு ரொம்ப கஷ்டமாயிருந்தால் இந்தப் புடவையை விற்றுவிடலாமென்று எண்ணினேன்", எனச் சொல்லிக்கொண்டிருந்தாள். மழை "சோ"வெனப் பெய்தது. வீட்டில் விறகு இல்லை!! ஒரு மணி அரிசியுமில்லை!!! தள்ளாடிக்கொண்டு கிழவர் கிருஷ்ணசாமி அய்யர் அங்கே வந்து, தாழங்குடையைத் திண்ணையில் சாற்றிவிட்டு, ஈரத் துணியைப் பிழிந்துகொண்டே, தழுதழுத்த குரலில் "ஏண்டா, சுந்தரம்! நீ இங்கே வந்திருக்கேன்னு உன் ஆம்படையா சொன்னா" வென ஆரம்பித்தார். கிழவர் வேறு யாருமில்லை. சுந்தரமய்யர் குடும்பத்தை அபிமானத்துடன் முன்னுக்குக்கொண்டு வந்தவர். "கமலாவை புடவைபற்றிய ஆசையை விட்டுவிடு" என்று எச்சரித்தவர். விஷயங்களை நன்றாய் உணர்த்தி, ஆபத்தில் உதவி செய்ய வந்தவர். "ஏ! கமலீ, கவலைப்படாதே. நீலப் புடவையைக் கொண்டா"! யென்று அப்புடவையை வாங்கி, விளக்கின் எதிரில் அலட்சியமாயும், பைத்தியம் பிடித்தவர்போலும் சதா உதறினார். மடிப்புகள் கலைந்தன. புடவை கிழிந்துவிடும்போல் ஆயிற்று. கிழவருக்குப் பைத்தியம் தான் பிடித்துவிட்டதோ என்று துரைசாமியும், சுந்தரமும் நினைத்தார்கள். கமலீயின் கண்களில் கண்ணீர் "கர கர" வென்று உதிர ஆரம்பித்தது. தன் கணவன் கவனித்துவிட்டான் என்று உணர்ந்தாள். உடனே கண்களைத் துடைத்துக்கொண்டு, "தாத்தா! கொண்டாங்கோ! நான் நன்னா

ஓதரிப் பாக்க்ரேன்" எனச் சொல்லிப் புடவையை வாங்கி ஒவ்வொரு மடிப்பாகப் பிரித்துக்கொண்டே வந்தாள். நடுப்புடவையில் ஓர் சிறிய அச்சடித்த காகிதம் ஒட்டப்பட்டிருந்தது. எல்லோரும் ஆவலுடன் அதைப் படிக்க ஆரம்பித்தார்கள்.

"இந்த நீலப்புடவைக்கு முதற் பரிசு ரூபாய் ஆயிரம். இதன் நெம்பர் எங்களிடம் இருக்கிறது. இதை வாங்கியவர்கள் உடனே எங்கள் நெசவுச் சாலைக்கு இப்புடவையுடன் வந்தால் உடனே பரிசுத் தொகையைப் பெறலாம். இதைப்போல் ஆயிரம் புடவைகளுள் இந்த நெம்பருக்குத்தான் முதற் பரிசு ரூபா ஆயிரமும், மற்றச் சிறிய பரிசுத்தொகைகள் வேறு 9 புடவைகளிலும் உள்ளன" என எழுதியிருந்தது,

அடுத்த ஊரிலுள்ள பிரபல நெசவுத் தொழில் நாச்சியப்பக் கவுண்டர் விலாசமும் அதில் இருந்தது. மறுநாள் கிழவர் பரிசுத் தொகையுடன் கமலாவையும் துரைசாமியையும் அழைத்து வந்தார்.

துரைசாமிக்கு உயர்தர உத்தியோகம் கிடைத்துவிட்டது. "கமலீ! கணவனைத் தெய்வமாய் எண்" எனச் சொன்ன கிழவரும் பரகதியடைந்துவிட்டார். ஆனல், அப்புண்ணிய புருஷன் ஞாபகார்த்தமாய் தொட்டிலில் தூங்கும் குழந்தைக்குக் கிருஷ்ணன் எனப் பெயரிட்டழைத்தாள். "கமலி! குழந்தைக்கு நீல நிறத்தில் கவுன் வாங்கலாமா"வென்று கேலியாய்க் கேட்டுக்கொண்டே துரைசாமி ஆபீசிலிருந்து உள் நுழைந்து சட்டையைக் களைய ஆரம்பித்தான். "உங்களுக்குச் சதா பரிகாசந்தான். முதலில் காப்பியைச் சாப்பிடுங்கோ"வென்று புன்னகை பூத்த முகத்துடன் கமலீ காட்சியளித்தாள்.

## 23

# இதென்ன உலகம்!

எஸ். டி. ஸ்ரீ.

ஒருநாள் சாப்பிட்டுவிட்டு டிராயிங் ரூமில் உட்கார்ந்துகொண்டு யாவரும் பேசிக்கொண்டிருக்கையில் ஸாரளாவின் அத்தைபுருஷன் "ஸாரள்! பத்ரிகாலயத்திற்குச் சென்று பார்க்க விரும்பினுயல்லவா! நேற்று, 'கிளப்பி'ல் அவரைச் சந்தித்தேன். இன்று நீங்கள் சென்று பார்க்கலாம். அவர் உத்திரவு கொடுத்துவிட்டார்" என்ருர். ஸாரளா ஸந்தோஷத்துடன் நாற்காலியிலிருந்து எழுந்தாள். "தாங்க்யூ வெரிமச்" (தங்களுக்கு மிக வந்தனம்) என்ருள். பிறகு அஹல்யாவைப் பார்த்து "நீங்கள் கொஞ்சம் இளைப்பாறிவிட்டு, 'டிரஸ்' பண்ணிக்கொண்டு வாருங்கள். மூன்று மணிக்குப் புறப்பட்டுப் போகலாம்" என்று சொல்லித் தன் அறைக்குச் சென்ருள். மணி மூன்றுக்குக் கார் தயாராகி நின்றது. ஸாரளாவும், அஹல்யாவும் 'சுதேசமித்திரன்' கார்யாலயத்தில் இறங்கினர். வாயிலில் "பாரா" புரிந்த சேவகன் வெகு வணக்கத்துடன் வழி காட்டினன். அஹல்யா மெதுவான குரலில் "பாராக்காரன் என்ருல் பயமாயிருக்கிறது. நம்மைத் தடுக்காமல் உள்ளே விட்டானே" யென்ருள். ஸாரளா சிரித்துக்கொண்டு "என்னம்மா பயம்! காரியாலயத்திற்கு வருகிற கண்ணியமான விருந்தினர்களைத் தடுத்துப் பயமுறுத்தவா இங்கே நிற்கிருன்! மேலும் அவனுடைய முகத் தோற்றத்தைப் பார்த்தீர்களா" என்ருள்.

அஹ:—(மெதுவான குரலில்) பர்ர்த்தேன்! பார்த்தேன்! மிகவும் மரியாதையும் கம்பீரமும் நிறைந்த தோற்றந்தான்! ஸாரளா! இங்கே எவ்வளவு குளிர்ச்சியாயிருக்கிறது! அடர்ந்த நிழலும், அடிக்கும் மெதுவான க்ாற்றும், வெளியே இருக்கும் நிலைமைக்கு இங்கு என்ன மாறுதலாக இருக்கிறது பார்த்தாயா"?—

இருவரும் ஸ்ரீ பத்திராதிபருடன் கொஞ்ச நேரம் ஸம்பாஷித்துவிட்டு, அவர் அனுப்பிய ஓர் துணையுடன் காரியாலயத்தைச் சுற்றி வர ஆரம்பித்தனர். அச்சடிக்கும் யந்திரங்களை பேப்பர்களில் தடார் தடாரென்று விஷயங்களை மாயமாய் பதித்து வெளியே தள்ளும் அந்த மாய ஸ்வரூபங்களை-பேப்பர்களை அழகாக மடித்து மடித்து அடுக்கியிருக்கும் அழகை, எல்லையற்ற ஆட்கள் அவரவர் பணியிலமர்ந்திருக்கும் அமரிக்கையை-மாய யந்திரங்களின் மர்ம சப்தத்தினிடையில் மனிதனது வியக்கத்தக்க அமைதியையும்-காரியாலயத்தில் உபபத்திராதிபர்களின் ஆபீஸ்களின் சுறுசுறுப்பையும், கண்ட அஹல்யை வியந்தாள். உழைப்பு, ஒழுங்கு, அமைதி, பொறுமை, சக்தி இவையாவும் ஒருங்கு அமைந்து எல்லாமாகச் சேர்ந்து மனித வர்க்கத்தின் தொண்டாகப் பரிணமித்து, அத் தொண்டின் தேவாலயம்போல் விளங்கின. அக்கார்யாலயத்தில் இருந்தக்கால் ஓர் தேவாலயத்தில் இருந்தாற்போன்ற சாந்தி, அன்பு, பெருமை முதலிய பல உணர்ச்சிகளால் அஹல்யை நிறையப் பெற்ருள். இறுதியில் படிக்கட்டுகளிலும் இறங்கி, பத்திராதிபர் அன்புடன் அவர்களை அனுப்பிய காட்சி அவள் நெஞ்சில் பதிந்தது. காரில் உட்கார்ந்த உடன் "பொன்னுஸாமி! பீச்சுக்கு நேரில் விடு" என்ருள் ஸாரளா. "பீச் என்ருல் அவர்களுக்குப் ப்ரியமான இடம். திருவல்லிக்கேணி, ஐஸ் ஹவுஸுக்கு எதிர்ப்புறமென்று டிரைவர் பொன்னுசாமிக்குத் தெரியும். குறிப்பிட்ட இடத்தில் கார் நின்றது.

அஸ்தமானத்தின் இறுதி நிலையில் இருந்த ஸூர்யன் பழுத்துச் சிவந்த பழம்போல் காணப்பட்டு, வானையளாவிய எல்லையற்ற கட்டிடங்களுக்குப் பின் மறைந்தான். மணலில் விசித்ரமான ஜாலவேலை காணப்பட்டது.

அஸ்தமிக்கும் ஸூர்யனின் பொன் நிறம் பூசப்பெற்றுப் பின் சிகப்பு நிறம் ப்ரதிபலிக்கப்பெற்றுச் சற்று நேரத்தில் நீலம் சிறிது கலந்த வெள்ளை நிறம் பரவியது. அலைகள் நம் அபலா மணிகளைக் கண்ட ஸந்தோஷத்தினுற் போலப் பொங்கி எழுந்து படர்ந்து சுருட்டிக்கொண்டு மீண்டன விளையாட்டாக மணலை வாரி அள்ளிய வண்ணம்.

ஸாரளா:—ஆமாம்! அதோ தெரிகின்றது பாருங்கள் ஸெனெட் ஹவுஸ்! அதற்கு அடுத்தாற்போல் அழகிய கம்பீரமான கட்டிடம்! அதுதான் "ஸர்வ கலாசாலை நூல் நிலயம்" அதில் உலகிலுள்ள சிறந்த அறிவாளிகள், காவ்யம், நாடகம், கலை, சமயம், சமூகம், அரசியல், விக்ஞானம், இவற்றில் இதுகாறும் எழுதிய உயர்ந்த நூல்களைச் சேமித்து வைத்திருக்கின்றனர். நகரில், பொது மக்களுக்கு, அதாவது, பட்டதாரியான, பொது மக்களுக்கு, இப்புத்தகங்களை வீட்டுக்கு எடுத்துச் சென்று வாசிக்க உரிமையுண்டு. மேலும் இதுமாத்திரமா! சென்னைக்கு வெளியில் கூட இம்மாகாணத்தில் எந்த இடத்திலும் உள்ள பட்டதாரி மாணவர்களோ, மற்ற ஜனங்களோ-சில நிபந்தனைகளுக்குட்பட்டு இந்த உரிமையை அனுபவிக்கலாம். ஏழை மாணவர்களுக்கு இது எத்துணை உபகாரம். மேலும்

கட்டிடத்துக்குள் சென்று படிக்கவும் ஸகல வஸதிகளும் இருக்கின்றன.

அஹ:—ஆம்! அழகிய கட்டிடம்! உயர்ந்த புஸ்தகங்கள்! இனிய கடற் காற்று!

வேறு என்ன வேண்டும்? ஆசையில்லாதவர்கூடப் படிக்க விரும்புவரே!

அது கிடக்கட்டும், ஸாரளா! இந்த ஸமாசாரப்பத்திரிகைகளால் நமக்கு என்ன பயன். எனக்குத் தெளியச் சொல்லுவாயாக!

ஸாரளா:—ஐயோ! என்ன பயனா! ஸமாசாரப்பத்திரிகை இல்லாவிட்டால் நாங்கள் உயிரற்றவர் போல்தான்! அந்தப்பழக்கம் ஏற்பட்டுவிட்டபடியால் உங்களுக்கும் அப்படித்தான்! அது நமது ச்வாஸநிலை என்றே சொல்லலாம். காலையில் காப்பி எவ்வளவு அவச்யமாகவும் இன்பமாகவும் இருக்கிறதோ அதுபோல், காப்பி குடித்தவுடன் சாய்வு நாற்காலியில் படுத்து, கையிலும் தினசரிப்பத்திரிகையும் இருந்துவிட்டால், நமது இன்பத்திற்கு நிகர் எடுத்துரைக்க முடியாது.

அஹ:—ஒப்புக் கொண்டேன். ஆனால் இது எல்லோருக்கும் பயனளிக்குமா?

ஸாரளா:—ஏன் அளிக்காது? தந்தி, கம்பியில்லாத்தந்தி, தபால், ரயில் இவைகள் மலிந்த இந்தக் காலத்தில். ஸமாசாரம் ஓரிடத்திலிருந்து பல்லாயிரம் மைல் அப்பாலுள்ள இடங்களுக்குக்கூட எளிதிற் சென்றுவிடும். காலத்தின் போக்கே மாறிவிட்டது என்று சொன்னேனல்லவா? பிரயாண ஸவுகர்யங்கள் ஏதுமற்ற பழைய காலத்தில் ஒரு நாடு மற்றொரு நாட்டுடன் தொடர்பில்லாமலே காலங்கழிக்கலாம். ஒரு மலையோ, மஹாநதியோ, கடலோ நாட்டுக்கு எல்லையாயிருந்துவிட்டால். அந்த எல்லைக்கு அப்பாலுள்ள இடத்தில் எந்த நிகழ்ச்சியும் எளிதில் அறியப்படமாட்டாது. மேலும் நாட்டுக்கு எல்லை வகுத்துத்தான் என்ன பயன்? பழைய காலத்தில் நதியும், மலையும் கடத்தற்கு அரியவையாயிருந்தன! இப்பொழுதே கொந்தளிக்கும் கடலைமனிதன் எவ்வளவு நிர்ப்பயமாய் எளிதிற் கடக்கிறான்! ஒரு நாடு மற்றொரு நாட்டைப் புறக்கணித்துத் தனிப்பட்ட நிலைமையில் வாழமுடியாது. ஆகவே ச்வேதத்வீபம் என்று சொல்வேனல்லவா? அந்த இங்கிலாந்தில் நடந்த ஒரு நிகழ்ச்சி அவச்யம் உலகத்தையே பாதிக்காமல் இருக்க முடியாது. ஒரு பெரிய குடும்பம். மனிதவர்க்கமே ஒற்றுமையுடன் வாழவேண்டும். தனிப்பட்டவாழ்வின் காலம் போய்விட்டது. இந்த உயர்ந்த கருத்தையே எச். ஜி. வெல்ஸ் முதலிய பெரியோர் வற்புறுத்திவருகின்றனர்.

அஹ:—ஸரி இதற்கும் ஸமாசாரப்பத்திரிகைகளுக்கும் என்ன?

ஸாரளா:—சொல்லுகிறேன். கம்பியில்லாத்தந்தி, டிரங்கு டெலிபோன் முதலிய கண்டு பிடிப்புகளால், உலகின் ஒரு பாகத்தில் நடக்கும் நிகழ்ச்சி மற்றொரு பாகத்திற்கு அறிவிக்கப்படுகிறது. இந்நிகழ்ச்சிகளைத் திரட்டி அந்தந்த நாட்டு ஸமாசாரப்பத்திரிகைகள் ஆங்காங்கு செய்திகளைப் பரப்புகின்றன. மனிதவாழ்வில் பல துறைகளிலும், மனிதனுடைய முன்னேற்றத்திற்கு இது ஸாதனமாயிருக்கிறது. பொருளாதாரம், சீர்திருத்தம், கல்வி, வியாபாரம் முதலிய துறைகளில் எல்லையற்ற

மாறுதல்களை உண்டு பண்ணி உலகெல்லாம் ஒருங்கு முன்னேற ஏதுவாகிறது. பிற நாட்டு ஸமாசாரங்களன்றி உள் நாட்டுச்செய்திகளையும், ஏராளமாகப்பிரசுரிக்கின்றன. இதனால், சட்டசபைகள், நீதிமன்றங்கள், இவற்றின் நிகழ்ச்சிகள் பரவுவதால் மனிதன் தன் நாட்டின் ஆளுகையில் விசேஷ ச்ரத்தையும் பங்கும் எடுத்துக் கொள்ள இடமுண்டாகிறது.

அஹ:—ஆமாம்! உணர்ந்து கொண்டேன்! மாணவ மாணவிகள் பரீக்ஷைக்குச் செல்கிறார்கள். அவர்களின் தேர்ச்சியைப்பற்றிய விஷயங்கள் வெளியாகின்றன. அவரவர் வீட்டிலிருந்தபடியே தெரிந்துகொள்வது நலமே.

ஸாரளா:—நலந்தான். அதுமாத்திரமா! இன்ன இடத்தில் இன்ன நாடகம்-இன்ன சினிமாக் காட்சி, இன்ன வருட விழாக் கொண்டாட்டம்-இன்னார் சொற்பொழிவு ஸங்கீதக் கச்சேரி—அது மாத்திரமா? குதிரைப் பந்தயம், பந்தாட்டப் பந்தயங்கள்—எல்லாம் நமக்குப் பேப்பர் மூலம் தெரிந்து விடுகின்றன.

அஹ:—இவை தெரியாமல் இருந்தால் பணம் செலவாகாமலிருக்குமல்லவா. இவற்றைப்பரப்பும் முறையில் நமக்குப் பத்திரிகைகளால் கெடுதல்தானே.

ஸாரளா:—(சிரித்துக் கொண்டு) நல்ல வேலை செய்தீர்கள்! நாலு விஷயத்தையும் நாடறியுமாறு எடுத்துரைக்கும் பத்திரிகைகள் பேரில் என்ன பிழை? நன்மை, தீமைகள் என்னவென்று பகுத்தறிந்து கொள்வது நம் கடமையன்றோ!

அஹ:—நியாயமே! நான் வேடிக்கையாகப் பேசினேன். யதார்த்தமல்ல.

ஸாரளா:—அன்றைக்குச் சில புடவைகள் வாங்குவதற்கு அத்தை நம்மை அழைத்துச் சென்றாளே. உனக்கு ஞாபகம் இருக்கிறதா?

அஹ:—ஆமாம்! புதிதாக மைஸூர் ஸில்க்சேலைகள், நூதனமான கலர், பார்டர், முதலிய வேலைப்பாடுடன் வந்திருப்பதாக அறிந்தோமே அது எப்படி?

ஸாரளா:—நீங்கள்தானே கேட்டுக்கொண்டிருந்தீர்கள். "ஹிந்து" "சுதேசமித்திரன்" இந்தப் பேப்பர்களில் 'விளம்பரத்தைப் படித்தோம். புதுமாதிரியென்றால் அத்தைக்குப் பைத்தியம். உடனே விளம்பரத்திற் கண்ட விலாஸத்திற்கு நம்மை அழைத்துச் சென்று புடவைகளும் வாங்கி விட்டாள்.

அஹ:—பேப்பரில் விளம்பரப்படுத்தி நமக்குப்புடவை கொடுப்பதில் அவர்களுக்கு என்ன சிரத்தை?

ஸாரளா:—நமக்கு, நாம் விரும்பிய பொருளைக் கொடுக்கவா! அவர்களின் ஆசை? தங்கள் கம்பெனியில் தருவித்திருக்கும் சேலைகள் விற்பனையாக வேண்டுமானால், அதைப் பல ஜனங்களுக்குத் தெரியப்படுத்த வேண்டும். சமாசாரப் பத்திரிகை மூலமாக அல்லாமல், வேறு எப்படிமுடியும்? இன்று மத்தியானம் தோன்றும் கடையைப்பற்றி, மறு நாட் காலையிலேயே சென்னை மாகாணத்திலுள்ள யாவருமே தெரிந்துகொள்ளலாம். மேலும், "உப்புடன் கற்பூரம் வரையில் உள்ள ஸாமான்களின் விலை அச்சிடப்பட்டுப் பொது மக்களுக்கு 'விலை வாசி' தெரிய வருகிறது.

அஹ:—ஏன்! புருஷன் பெண்டாட்டி சண்டை கூட வந்து விடுகிறது.

ஸாரளா:—ஆமாம்! மிருகப்ராயமான சில ஆண்களின் கொடுமைக்கு ஆளாகித் தற்கொலை புரிந்துகொண்ட துர்ப்பாக்கியவதிகளைப்பற்றிப் படிக்கிறோம்.

அஹ:—ஐயோ! நலாந்தாவில் பல வருஷம் படித்துவிட்டுப் பின் தன் காதலியான கல்ஹம்ஸினியைக் காணச்சென்ற ஸிம்ஹள நாட்டு இளவரசன் ஸிம்ஹளம் சென்றபொழுது அவள் இறந்து பல வருஷமாயின என்று கேள்வியுற்றுத் திடுக்கிட்டானே! ஒரு ஸமாசாரப்பத்திரிகையில் அவள் நோயுற்றதைக் கேட்டிருந்தால்!! ஆ இதென்ன உலகம்!!

---

# மனிதர்களே!..

## சரும ஆரோக்கியத்திற்கு

## ரெக்ஸோனுவை

## உபயோகியுங்கள்



ஸ்திரீகளுக்குத்தான் முக வசீகரத்திற் கேற்றது ரெக்ஸோனு சோப்பென்று அவசரப்பட்டு எண்ணிவிடாதீர்கள். சரும-ஆரோக்கியத்தை உயர்வாகக்கருதும் ஒவ்வொருவருக்கும் அது ஒரு முக்கிய டாய்லட் சோப்பாகும். மனிதர்கள் சிறப்பாய் அனுபவிக்கிற நேர்த்தியான, மனதிற்குகந்த, உற்சாகத்தை அளிக்கும் சோப் அதுதான். இந்த நேர்த்தியான, பசுமை வாய்ந்த, விரைவில் நுரையை உண்டாக்கும் சோப்பின் ஒரு சிறந்த நன்மை என்னவென்ருல், சுகத்தையளித்து, சரும வியாதிகளைப் போக்கும் கிருமி நாசினியாகிய *கேடில் என்னும் மருந்து அதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. ரெக்ஸோனுவின் ஏராளமாய் விரைவிலேற்படும் நுரை வெகு சீக்கிரத்தில் ஆரோக்கியத்தை அளிக்கும் கேடில் என்னும் மருந்தை உங்கள் சருமத்தின் ஒவ்வொரு அடிப்பாகத்திலும் கொண்டு போய்ச் சேர்க்கிறது. அங்கேதான் சரும உபத்திரவங்களும், சரும மாசு மறுக்களும் அதிகமாய் அடிக்கடி உண்டாகின்றன. இவ்விதமாக உங்கள் சருமம் முழுவதும் சுகமடைந்து, சுத்திசெய்யப்பட்டுத் தூய்மையையும் அடைகிறது. ஆகையினுல் ரெக்ஸோனு சோப்பை உபயோகிக்க இன்றே ஆரம்பியுங்கள்—நெடுகிலும் உபயோகியுங்கள்.




சரும சுகத்திற்கு அதிக சக்திவாய்ந்து, குணமளித்துப் போஷிக்கும் தைலம் சேர்ந்தது. சுகத்தைத் தந்து காப்பாற்றும் தன்மையுள்ள கேடில் யாவராலும் மதிக்கப்பட்டு விஞ்ஞானிகளால் சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது.

ரெக்ஸோனு ஆயின்ட்மென்டை உபயோகியுங்கள். வெட்டுக் காயங்கள், புண்கள், கட்டிகள், கரபபான், ரணங்கள், முகப் பருக்கள், அரிப்புகள், சணைப்புகள், கடிகள், மச்ச மறுக்கள் முதலிய எல்லா சரும வியாதிகளுக்கும் ரெக்ஸோனு ஆயின்ட்மென்டை உபயோகியுங்கள்.




★ரெக்ஸோனுவிலுள்ள கேடில் ஒப்பற்ற கிருமி நாசினியாகிய ஒரு கலப்பு மருந்து.

RP. 28-50-40 TM

REXONA PROPRIETARY LIMITED







கோடிக்கணக்கான உடல் நலமற்ற மக்களுக்கு புத்துயிரளித்து நரம்புகளுக்கு வலிவையூட்டி திடகாத்திரர்களாக்கி வரும் டானிக் ஜீவாம்ருதம் இன்னும் இரண்டு வருடங்களில் பொன் விழா கொண்டாடும்

ஆயுர்வேதாச்ரமம் லிமிடெட், மதராஸ்.

## காங்கிரஸ் மகாசபை சரித்திரம்

3 பாகங்களையும் ஒரே தடவையில் வாங்கும் சந்தாதாரருக்கு ரூ. 4.
மானேஜர், சுதேசமித்திரன் புத்தகசாலை, சென்னை.

# வாலிப உணர்ச்சியைப் பெறுங்கள்

இந் நவீனம் அகாலத்தில் வயோதிகமடைந் தவர்களுக்கு வாழ்க்கையின் இன்பங்களை அளிக்கவல்லது. 100% உத்தரவாதம் இந்த வைத்திய நவீனம் டாக்டர்கள் ஹகீம்கள் & வைத்தியர்களால் சிபார்சு செய்யப்பட்டது.

1. பலவீனம்
2. அகால வயோதிகம்
3. மனச் சோர்வு
4. சிந்தனை இன்மை
5. அஜீரணம
6. நரம்புத் தளர்ச்சி
7. இருதயக் கோளாறுகள்
8. கவனக் குறைவு
9. கெட்ட ரத்தம்

முதலியன உங்களுக்கிருந்தால்



யௌவனம்
சுறுசுறுப்பான
ஆடவர்
வசிகர
அழகிய
பெண்டிர்

Dr. சாம்பமூர்த்தி, L. M. P. (ரெஜிஸ்டர்ட்) பெஜ்வாடா. அவர்கள் அதிக சம்போகத்தால் ஏற்படும் நரம்புத் தளர்ச்சி இந்திரிய சம்பந்தமான வியாதியஸ்தர்களுக்கிதை யளித்ததில் விசேஷ பலனைத் தந்ததென்று கூறியுள்ளார்.

Dr. ஸேவியர் கருபசேரி கும்பலங்கி அவர்கள். விளம்பரப்படுத்தப்பட்டுள்ள இம் மருந்துகள் வியாதியஸ்தர்களுக்கு அதிக பயனளித்தமையால் அவைகளை அதிகம் புகழ்வது சரியல்ல என்றும் பாலர் முதல் வயோதிகர் வரை ஆண்மைக்கும் அகால வயோதிகத் தோற்றத்திற்கும் இந்திரிய நஷ்டத்திற்கும் இதை உபயோகிக்கலாமென கூறியுள்ளார்.

ஹகீம் வைத்திய A. D. ஷர்மா பிலட்ஷரின்:- இந்த மருந்துகள் சிறுபிள்ளை விளையாட்டின் துர்பலன்களைப் போக்குவதில் நிகரற்றதென்றும் இதற்கிணை இவ்வுலகில் கிடையாதென்றும் எந்த சீதோஷ்ண ஸ்திதியிலும் சாப்பிடலாமென்றும் கூறியுள்ளார்.

மானேஜர் மைமாகளின் மதராஸ் எழுதுவதாவது:- படாலாவில் டாருல் ஷபா கோலியான் காரியாலயத்திற்கு நான் விஜயம் செய்தேன். பொதுஜன உபயோகார்த்தம் தொழில் நடத்தி வரும் இந்த ஸ்தாபனத்தைப் பார்க்கையில் எனக்கு பூரண சந்துஷ்டி ஏற்பட்டது. ஆயிரத்திற்கு மேற்பட்ட அனேக நற்சாக்ஷிப் பத்திரங்களை நான் பார்வையிட்டேன்.

உத்திரவாதமான நிவாரணம்

இம்மருந்து பலன் தராவிடின் சத்திய வாக்கைப் பெற்று பணம் வாபஸ் தரப்படும். இது வைத்தியர்களால் சிபார்சு செய்யப்பட்டது. கெட்ட மருந்து கலப்பற்றது சாப்பிட சௌகர்யமானது மர்மமாகவும் சாப்பிடலாம்.

இளமை யளிக்கும் மாத்திரைகள் 21 நாட்களுக்கு ரூ. 5/-.
வெளிப் பூச்சுக்குத் தைலம் 21 நாட்களுக்கு ரூ. 5-8/-.
மர்ம வியாதிகளுக்கு இணையற்ற ஔஷதம்.

எல்லோராலும் பின்பற்றப்பட்டதேயொழிய யாவராலும் நிராகரிக்கப்படவில்லை ஆங்கிலத்தில் ஆர்டர் செய்க:— To tne Manager.

DAR-UL-SHAFA GOLIAN (Regd) A. S. W. Batala City (Punjab)
டாருல் ஷபா கோலியான் (ரெஜிஸ்டர்ட்) A. S. W. படாலா ஸிடி. (பஞ்சாப்)

தந்தி: "DASG." ஸ்தாபிதம்: 1921. டெலிபோன் நெ. P.C.28

பிரபல மருந்து வியாபாரிகளால் விற்கப்படுகின்றது.

மைசூர் ஸ்டேட் & தென்னிந்திய டிஸ்டிரிபியூடர்கள்:—
மெஸர்ஸ் J. ராதாகிஷன்தாஸ் & ஸன்ஸ், 106, தி நாலர் பேட், பெங்களூர் ஸிடி.
டெலிபோன்: 2957
தந்தி: "BATHEJA" பெங்களூர் ஸிடி.

ஏஜண்டுகள்:—1. மெஸர்ஸ் ராகவன் & கம்பெனி, ஸ்ரீ நரசிம்மராஜா ரோட் பெங்களூர் ஸிடி. 2. மெஸர்ஸ்: S. C. பர்னுன்டோ & கம்பெனி, 771, இரண்டாவது டிவிஷன் மரதானு கொழும்பு, இலங்கை. 3. மெஸர்ஸ். ஆல்பட் & கோ, 182, மவுண்டு ரோடு, மதராஸ். 4. மெஸர்ஸ் தாஸ் & கோ, கெமிஸ்ட்ஸ் கூனூர். 5. மெஸர்ஸ் மூல்சந்த் & கோ, ஸ்டேஷன் ரோடு, செகந்திராபாத் (Dn.) 6. மிஸ்டர் C. கன்னைய நாயுடு, கெமிஸ்ட், கோயிலோன். 7. டாக்டர் R. சங்கர குமார பிள்ளை, (Regd) மூவட்டுப்பிழை (திருவாங்கூர்) 8. விசாக் மெடிகல் ஸ்டோர்ஸ், விசாகப்பட்டணம். 9. T.K. பீதாம்பரம், ரிஜிஸ்டர்டு மெடிகல் பிராக்டிஷனர், P.O. அம்பலப்புழா (திருவாங்கூர்) 10. பிரமியர் பார்மஸி, மெயின் ரோடு, விசாகப்பட்டணம். 11. ஸ்ரீ லக்ஷ்மி ஜெனரல் டிரேடர்ஸ் 5/20, காந்திபுரம், கோயமுத்தூர் 12. ஹிந்துஸ்தான் மெடிகல் ஹால், ஜியூ டவுன், மட்டஞ்சேரி, (கொச்சி) 13. கே. ஆலயம், ஹோமியோபத், ஆர். எஸ். புரம், கோயமுத்தூர். 14. சென்டிரல் மெடிகல் ஸ்டோர்ஸ், ஸ்டேஷன் ரோடு, செகந்திராபாத், (Dn). Dr. M. சிவராஜன், ஆயுர்வேத வைத்தியசாலை, திருவனந்தபுரம், திருவாங்கூர். 16. Dr. ஸேவியர் கருபசேரி, கும்பலங்கி, கொச்சி ஸமஸ்தானம்

7. படகாரா டவுன் மெடிகல் ஹால், படகாரா (மலபார்) 18. டாக்டர் தரிசி சுப்பராயுடு ரிஜிஸ்டர்டு மெடிகல் பிராக்டிஷனர் போடிலி P. O. (நெல்லூர் ஜில்லா). 19. Dr. R. K. பழனியப்பா 31, அக்ரகாரம் செவ்வாய்பேட், சேலம். 20. Dr. F. C. மான்பிரட், சாதுகுரு சிகித்ஸாலயம், நீலேஸ்வர், தென் கன்னடம்.

---

உங்களுக்கு
மலச்சிக்கலோ அல்லது
ரத்தக்கொதிப்போ அல்லது
மண்டை கனமோ அல்லது
தலைவலியோ அல்லது
மயக்கமோ அல்லது
வாய் துர்நாற்றமோ அல்லது
சருமப்படுவனோ இருந்தாலும்
உடனே பரீக்ஷியுங்கள்

# காஸ்டபீன்

ருசி மிகுந்த சாக்லட் மல விரோசனி, மலச்சிக்கலை ஒழிக்க பத்திரமும் நிச்சயமுமான வழி.

குழந்தைகள், நடுவயதினருக்கும், ஆரோக்யம், பலத்தை அளித்திருக்கின்றது. எல்லா மருந்து வியாபாரிகளிடமும் 2 மாத்திரை கொண்ட பாக்கெட்டுகளிலும் 25 கொண்ட பாட்டில்களிலும் கிடைக்கும்.

# CASTOPHENE
CASTOR OIL CHOCOLATES

ஏஜண்டுகள்:—
மெஸர்ஸ் சிவராம் & ஸ்வாமி லிமிடெட்.
154, நைனியப்ப நாயக்கன் தெரு,
பி. டி., மதராஸ்.

---

# பிரபல ஜோதிஷர்

மஹாராஜாக்களால் தங்க மெடல்கள் பரிசுபெற்றவர். ஒருஜாதகம் கணிக்க ரூ. 2



நேரில் ஒருஜாதகம் பார்க்க ரூ. 5. மாதவாரிஒருவருஷ பலன் எழுத ரூ. 5. ஆருடம் 8கேள்விகளுக்கு ரூ. 1. மேல் கேள்வி 1-க்கு அ. 8. ஜாதகம் அல்லது எழுதும் நேரம் தேவை.

பண்டித காழியூர்
டி. ஸ்ரீனிவாஸாச்சாரியார்,
"சந்திரிகை" எல்டாம்ஸ் ரோட்,
தேனாம்பேட்டை போஸ்டு. மதராஸ்.

---

# ஆனந்த பற்பொடி

40 வருஷங்களாக பிரபலமடைந்தது.




எங்கும் கிடைக்கும்.

ஹைக்கோர்ட்டில் உரிமைபெற்றது.

போலிகள் ஜாக்கிரதை!

வைத்தியரத்ன யு. ராமனாத சாஸ்திரி,
வைத்திய வித்தாச்ரமம், 39, பஜார் ரோட்டு
மைலாப்பூர் :: மதராஸ்.





மகாத்மாஜி இந்தியா மந்திரி பெதிக் லாரன்ஸ் பிரபுவின் வாசஸ்தலம் சென்று சென்ற 18-ந்தேதி பேசினார். காந்திஜியைக் கைகுலுக்கி வரவேற்கிறார் இந்தியா மந்திரி

—ஜி. எஸ். ஏ.,

(இடது)

புதிய டில்லியில் காந்திஜியைக் காணச் சென்ற ராஜாஜியும், கபார்கானும் தோட்டிகள் காலனியிலிருந்து புறப்பட்டனர். இருவரும் ஹாஸ்யம் ததும்பப் பேசிச் சந்தோஷப்பட்டார்கள்

